# ஸ்ரீ ராமாநுஜன் — 236





சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாஸந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சி. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 20 | கீலக ௵ ஆவணி ௴ 1968 ஆகஸ்டு ௴ வெளியீடு. | ஸஞ்சிகை 8 |
|---|---|---|

## நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி—10

(திரு அழுந்தூர் பாடல்.)



அடியாராய் வாழ்மின் அறிவிலாப் பேய்காள்*
செடியார் வினையனைத்துந் தீரும்—முடிவில்
செழுந்தூரத் தன்னெனினுஞ் செங்கண்மா லெங்கள்*
அழுந்தூரத் தன்னணிய னும். (கo)

| | |
|---|---|
| அறிவு இலா பேய்காள் | அவிவேகி ஜனங்களே! |
| அடியார் ஆய் வாழ்மின் | (நீங்கள்) பகவானுக்குத் தொண்டர்களாய் வாழுங்கள்; |
| (அங்ஙனம் வாழப்பெற்றால்) | |
| செடி ஆர் வினை அனைத்தும் தீரும் | செடிபோலடர்ந்த உங்கள் பாபங்களெல்லாம் தொலையும்; |
| செம் கண் மால் | புண்டரீகாக்ஷனும் |
| அழுந்தூர் எங்கள் அத்தன் | திருவழுந்தூரிலுள்ளவனுமான எமது ஸ்வாமி |
| செழு தூரத்தன் எனினும் | வெகு தூரத்திலிருப்பவன் போலத் தோன்றினாலும் |
| முடிவில் | சரமகாலத்தில் |
| அணியன் ஆம் | ஸமீபஸ்தனாவன். |

இத்திருப்பதியைத் தேரழுந்தூரென்றும், திருவிந்தளூரைத் திருவழுந்தூரென்றும் பெரும்பாலும் வழங்கிவருகிறார்கள். உண்மையில் ஸ்ரீ பரிமளரங்கநாதன் ஸன்னிதியான திருவிந்தளூர்க்கு அந்தத் திருநாமந்தவிர வேறு திருநாமம் கிடையாது. அதைத் திருவழுந்தூரென்று வழங்கிவருவது தவறு. ஆமருவியப்பனுடைய திவ்யதேசமான இத்தலத்திற்கு அழுந்தூரென்று திருநாமம். திருவைச் சேர்த்தால் திருவழுந்தூரென்ன

லாம். இத்தலத்திற்குத் திருமங்கையாழ்வார் நான்கு திருமொழிகளால் மங்களாசாஸனம் செய்தருளியுள்ளார். அழுந்தூர் என்றும் அழுந்தையென்றும் ஸாதிப்பது தவிர, தேரழுந்தூரென்று ஓரிடத்திலும் ஸாதித்ததில்லை. பெரிய திருமடலில் "அன்னமிரைதேரழுந்தூரெழுஞ்சுடரை" என்றவிடத்து 'அன்னப்பறவைகள் இரைதேருமிடமான அழுந்தூர்' என்று விவக்ஷையேயன்றி, தேரழுந்தூரென்று திவ்யதேசத் திருநாமமாக விவக்ஷையன்று. உபரிசரவஸுவென்னும் சக்ரவர்த்தி தனது தவவலிமையால் ஆகாயத்தில் விமானத்துடன் ஸஞ்சரிக்குந் தன்மையனாயிருந்தகாலத்தில் தேவர்கட்கும் முனிவர்கட்கும் நேர்ந்ததொரு விவாதத்தில் பக்ஷபாதமாக முடிவு சொன்னதுபற்றி மஹர்ஷிகளால் சபிக்கப்பட்டு நிலத்தில் விழுகையில் அவனது தேர் அழுந்தப்பெற்ற தலம் என்கிற காரணத்தினால் தேரழுந்தூரென்று திருநாமமாயிற்றென்பது புராண வரலாறு. அதைப் பற்றின நிர்ணயத்தில் யாம் உதாஸீனராயிருப்போம்.

"எங்குமுளன் கண்ணன்" என்றபடி எம்பெருமான் எங்குமுள்ளவனாயினும், அவன் எங்குமுளனென்பதை உள்ளபடியறிந்த ப்ரஹ்லாதாழ்வான் போல்வார்க்குமட்டும் ஸமீபஸ்தனாய் மற்றையோர்கட்கு மிகவும் தூரஸ்தனாயிருப்பன்; இதற்குக் காரணம் அவனிடத்தில் அன்புகொள்ளாமையேயாம். 'நாம் எம்பெருமானுக்கு அடியோம்' என்று கொண்டால் போதும்; அதுவே வாழ்ச்சியாகும். அன்னவர்கட்கு எம்பெருமான் நமது அந்திமதசையில் ஸந்நிஹிதனாயிருந்து அர்ச்சிராதிமார்க்கத்தால் நம்மை வழிநடத்தி நலமந்தமில்லதோர் நாடு தந்து சேவைகளைச் செய்தருளக் குறையில்லை—என்றாராயிற்று. அப்பெருமான் திருவழுந்தூரென்னும் திருப்பதியில் நமக்காகவே வந்து நிற்கச் செய்தேயும் அங்கு வழிபாடு செய்யப் பெறாதவர்களின் அவிவேகத்தை யெண்ணி வருந்தி 'அறிவிலாப் பேய்காள்!' என விளிக்கின்றனர். "செடியாயவல்வினைகள் தீர்க்குந்திருமாலே" என்கிற பெருமாள் திருமொழியை யுட்கொண்டு "செடியார் வினையனைத்தும் தீரும்" என்றார்.

செய்யுளின் இரண்டாமடியின் தனிச் சீரான (முடிவில்) என்றதை 'அணியனாம்' என்றதோடு அந்வயித்து 'அந்திமகாலத்தில் ஸமீபஸ்தனாம்' என்று பொருள் கொள்வதன்றிக்கே, 'முடிவில் செழுந்தூரத்தன்' என்று பக்கத்திலேயே அந்வயித்து 'எல்லையில்லாத தூரத்தில் இருந்தானாகிலும்' என்று பொருள் கொள்வதும் பொருந்தும்; அப்போது, திருவழுந்தூரிலிருந்துகொண்டு அணியனாம்—என்று விவக்ஷிதமாகக் கொள்க. ... ... ... ... ... (௧0)

## அன்பர்களுக்கு அறிவிப்பு.

'நற்பொருளெழுநூறு' என்று நாம் எழுதத் தொடங்கின நூலின் முதல் நூறு ஏற்கெனவே (229ல்) வெளிவந்ததை அன்பர்கள் அநுபவித்திருக்கிறீர்கள். அதற்குமேற்பட்ட நூறுகள் இவ்விதழில் வெளிவருமென்று முன்னிதழில் தெரிவித்திருந்தோம். இரண்டு மூன்று நான்கு ஐந்தாம் நூறுகள் அச்சாகி முடிந்திருந்தாலும் ஆறாவது நூறை இப்போது இவ்விதழில் வெளியிடவேண்டியதாயிற்று. 2 to 5 நூறுகள் அடுத்த இதழில் தவறாது வெளிவரும். அந்த நான்கு நூறுகள் நூறு பக்கங்களுக்கு மேலாகியிருப்பதனால் இரண்டு ஸஞ்சிகைகளின் லக்கங்கொண்டு வெளிவரும். —ஸ்ரீ ராமாநுஜன் காரியதர்சி.

ஸ்ரீரஸ்து.

# ஸம்ப்ரதாய பரிசயம்

நமது ஸம்பிரதாயத்தில் ஜனித்து வியாபாரங்களிலும் உத்யோகங்களிலும் ஈடுபட்டிருப்பதனால் விஷயமறிந்துகொள்ள முடியாதவர்களுக்கு இப்பரிசயம் உதவியாகும்.

ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தமானது பகவத் ராமாநுஜ தர்சனமென்றும் எம்பெருமானார் தரிசனமென்றும் நெடுங்காலமாக வழங்கப்பட்டுவருகிறது. அதற்குக் காரணம் எம்பெருமானார் இதனைப் பலமுகமாக வளர்த்தருளினதேயாகும். இவ்விஷயம் உபதேச ரத்தினமாலையில் "எம்பெருமானார் தரிசனமென்றே யிதற்கு, நம்பெருமாள் பேரிட்டு நாட்டிவைத்தார்—அம்புவியோர், இந்தத் தரிசனத்தை யெம்பெருமானார் வளர்த்த, அந்தச் செயலறிகைக்கா" என்னும் பாசுரத்தில் மணவாள மாமுனிகளால் விளக்கப்பட்டது.

நம் நிகமாந்த மஹாகுரு பணித்த தத்வமுக்தா கலாபத்தின் முடிவில் (ச்லோ. 496ல்) "நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தம் பஹுபிருபசிதம் யாமுநேய ப்ரபந்தைஸ் த்ராதம் ஸம்யக் யதீந்த்ரை: இதமகிலதம:கர்சநம் தர்சநம் ந:" என்று பணித்துள்ளார். "நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தம்" என்றது ஸ்ரீமந்நாதமுனிகள் தொடங்கி ப்ரவ்ருத்தமானது நம் விசிஷ்டாத்வைத தர்சனம் என்றபடி. இங்கு நாதசப்தத்தினால் நாதமுனிகளே விவக்ஷிதர் என்பதை ஆசிரியர் தாமே ஸர்வார்த்த ஸித்தியில் விளக்கியுள்ளார். ஆகவே லக்ஷ்மீநாதோபஜ்ஞமென்று சிலர் பொருள் கூறுவது வக்தாவின் திருவுள்ளத்திற்கு இணங்காததாகும். ஆளவந்தாரருளிச் செய்த ஸ்தோத்ரரத்னத்தில் ஒன்றிரண்டு மூன்றும் சுலோகங்களினால் போற்றப்பட்ட ஆசிரியரே ஸ்ரீமந்நாத முனிகள். அந்த ஸ்தோத்ரத்தில் கடைசி ச்லோகத்தில் "பிதாமஹம் நாதமுநிம் விலோக்ய" என்றதும் இங்கு அநுஸந்தேயம்.



நாதமுனிகளுக்கும் முன்பு நம்மாழ்வார் ஆசார்யபீடத்தை அலங்கரித்திருந்தாலும், கலியுகத்தின் ஆரம்பத்தில் அவதரித்திருந்த அவ்வாழ்வார்க்குப் பிறகு நெடுங்காலம் ஸ்ரீவைஷ்ணவாசார்ய பரம்பரை இடையற்றிருந்தது. ஆழ்வார்களில் திருமங்கை மன்னனுக்குப் பிறகு ஸ்ரீ வைஷ்ணவதர்சன நிர்வாஹகர்களாயிருந்த ஸதாசாரியர்களின் திருநாமம் தெரியவராமையினால் ஸ்ரீமந்நாதமுனிகளே ஆசார்ய வரிசையில் முதல்வராக விளங்கிவருகிறார். இவர் திருவவதரித்தவிடம் வீரநாராயணபுரமென்கிற காட்டுமன்னார் ஸந்நிதி.

நாதமுனிகள் அரும்பெருந் தவஞ்செய்து நம்மாழ்வாரை யோகதசையில் ஸாக்ஷாத்கரித்து அவரிடமிருந்து திவ்வியப் பிரபந்தங்களை உபதேசமாகப் பெற்றார். அதனால்

"நாதனுக்கு நாலாயிரமுரைத்தான் வாழியே" என்று நம்மாழ்வார்க்கு வாழி திருநாமம் ப்ரஸித்தமாயிற்று.

நாதமுனிகள் நம்மாழ்வாரிடமிருந்து நிதியாகப்பெற்ற திவ்யப் பிரபந்தங்களை சதமுகமாகவும் ஸஹஸ்ரமுகமாகவும் தாம் பிரசாரம் செய்யத் திருவுள்ளம்பற்றி எம்பெருமானுடைய திருவாணையையும் பெற்றுத் தம்முடைய பாகினேயர்களான கீழை யகத்தாழ்வான் மேலையகத்தாழ்வான் என்னுமிருவர் பக்கலிலே விசேஷ கடாக்ஷம் செய்தருளினார். அவர்கள் குசலவர்களைப்போலே ஸங்கீதகலையில் மஹா நிபுணர்களா யிருந்தனர்; அவர்கள் அருளிச் செயல்களைக் குருமுகமாகக் கற்றுத் தென்னாடு முழுவதையும் அருளிச்செயல் மயமாக ஆக்கினர். அவர்கள் திவ்யப்ரபந்தங்களைத் தாளவிசையுடன் ஸேவித்துக் கொண்டிருந்தவர்களாதலால் அவர்களது ஸந்ததியாரான அரையர்கள் இற்றைக்கும் தாளவிசையுடன் ஸேவித்து வருகின்றார்களென்றுணர்க. வடமொழி வேதத்திற்கு வ்யாஸபகவான்போலே தென்மொழி வேதத்திற்கு ஸ்ரீமந்நாத முனிகள்—என்று ப்ரஸித்தமாயிற்று. முதலாயிரம், இரண்டாவதாயிரம், மூன்றாவதாயிரம், நான்காவதாயிரம் என்கிற பாகுபாடும், திவ்யப்ரபந்தங்களின் ஆநுபூர்வியும் நாதமுனிகளா லேயே அமைக்கப்பட்டதென்பர். உபதேச ரத்தினமாலையில் "வாய்த்த திருமந்திரத்தின்" என்கிற பாசுரத்தில் "ஆர்த்த புகழாரியர்கள் தாங்கள்" என்பதனால் நாதமுனிகளே விவக்ஷிதரென்பர்.

ஸ்ரீமந்நாதமுனிகள் ந்யாயதத்வமென்றும் யோகரஹஸ்யமென்றும் இரண்டு திவ்ய க்ரந்தங்களை யருளிச்செய்தார். ஆனால் அவ்விரண்டு க்ரந்தங்களும் இப்போது கிடைப்பன வல்ல. லுப்தங்களென்று சொல்லவேண்டியதாகிறது. நம்முடைய ஸம்பிரதாயத்தில் (ஆழ்வார்களுக்குப் பிறகு) ஆசார்ய வகுப்பில் நமக்கு உபஜீவ்யமாக முன்னம் க்ரந்தங்க ளருளிச் செய்தவர் நாதமுனிகளின் திருப்பேரனாரான ஆளவந்தார் என்று சொல்ல வேண்டியதாகிறது. இவரைப்பற்றி அடுத்த இதழில் எழுதுவோம். ... ✽

## நமது இரண்டே வரி.

சென்னை விப்கோ ஸ்தாபனக்காரர்கள் கோரியிருக்கிறபடி ஸ்ரீமந் நிகமாந்த மஹா குருவின் பெருமையை நாம் ஒரு வெண்பாவினால் தெரிவிக்கிறோம். அவர்கள் இரண்டே வரியில் தேவையென்று கோரியிருப்பதால் அப்படியே விண்ணப்பம்:—

கச்சிநகர் காதலித்த கல்விநிதித் தேசிகனை, நச்சி யுகந்து நவிற்றின்பம்—இச்சகத்தில்
பெற்றிடுவா ராரானும் பெண்களோ பேதையரோ, கற்றவர்தம் சென்னிக்கணி.

கருத்து:—ஸ்வாமி நம்மிடத்தே வந்தவதரிக்கவேணுமென்று கச்சிநகர் விரும்பிய (அல்லது) நாம் கச்சிநகரில் உதிக்கவேணுமென்று தாம் விரும்பியவதரித்த ஸ்ரீ நிகமாந்த மஹா குருவைப் பணிந்து மகிழ்ந்து நாவினால் நவிற்றின்பமெய்துமவர் இந்நிலத்தில் யாரேனு மாகிலுமாம்; பெண்களானாலும் பேதையரானாலும் அவர்கள் கற்றோர்தம் சிரமீது விளங்கப் பெறுவரென்பதாம். (வடமொழியில் இரண்டே வரி.) ச்லோ. காஞ்சீநகரீபாக்யம் நிகமாந்த குரும் த்ரிபிச்ச கரணைர் யே, உபலாலயந்தி தே தே விதுஷாம் அவதம்ஸநார்ஹசரணாஸ் ஸ்யு:.



இங்கே ஸேவை ஸாதித்தருளாநின்ற ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி, திருக்குடந்தை யாண்டவன் சென்னைமாநகரிலிருந்து ஸ்ரீ காஞ்சீபுரிக்கு எழுந்தருளி ஆச்ரமத்தில் ஓரிராத் தங்கியிருந்து மறுநாளே புறப்பட்டருளி ஆனிப் பௌர்ணமிக்கு முன்னடியே பெங்களூர் மகாநகரத்தில் மல்லேச்வரம் சேர்ந்து அங்கு மஹா வைபவமாக சாதுர்மாஸ்ய ஸங்கல்ப மஹோத்ஸவம் கண்டருளினர். தாமரையைக் கண்டால் வண்டுகள் விட்டகலுமோ? ஏற்கெனவே பெங்களூர் வாஸிகள் சிலவாண்டுகட்குமுன்பு ஆண்டவனுடைய திருநாவீறு தன்னை அநுபவித்த பாக்யசாலிகளன்றோ. மறுபடியும் அநுபவிப்பதற்காகவன்றோ ஸ்வாமியை சிரமப்படுத்தி அவ்விடம் வரவழைத்தார்கள். ஒருநாள் தவருமலும் ஒருவேளை தவருமலும் ஸ்வாமியின் அமுதமொழிவெள்ளங்கள் பேரின்பவெள்ளமென்னும்படி பெருகிக்கொண்டிருக்கின்றன. சிலநாள் சிறிய திருமடல் ஸாதித்தருளி, உயர்பதவியாளரான கவர்னர் முன்னிலையில் கீதோபந்யாஸம் தொடங்கி ஸாதித்தருளுகிறதென்று பக்தர்கள் அகங்குழைந்து தெரிவிக்கிருர்கள். பிராட்டி "தந்யா: பச்யந்தி மே நாதம்" என்றாற்போலே "தந்யாச் ச்ருண்வந்தி தாம் வாசம்" என்பவர்கள் பலபலர். ... ...

மேலேயுள்ள ஆண்டவன் ப்ளாக்கை உபகரித்த இண்டியன் எக்ஸ்ப்ரெஸ் ஆபீஸர்க்குப் பெருநன்றி.

ஸ்ரீ:

# விவாஹமும்—உபநயனமும்.





ஸ்ரீமதுபயவே. கோயில் ப்ரதிவாதி பயங்கரம் ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமியின் இரு திருக்குமாரர்கள் பண்டிதர்களாய் விளங்கிவருமவர்கள். மூத்தவர் ஸ்ரீமான் ப்ர. ரங்காசாரியரென்பவர் பலவாண்டுகளாய் தில்லைத் திருச்சித்திரகூடத்தில் ஆசிரியராய் விளங்கி வருகிறார். இளையவர் ஸ்ரீமான் ப்ர. ராமாநுஜாசாரியர் (கண்ணன்) என்பவர் பலவாண்டுகளாய் ஸ்ரீகாஞ்சீபுரியில் ஆசிரியராய் விளங்கிவருவதோடு பேரருளாளன் ஸன்னிதியில் அருளிச்செயல் கைங்கர்ய நிரதராயும் நம்பிள்ளை ஸன்னிதியில் ஈடுகாலக்ஷேப கோஷ்டியில் அந்விதராயுமிருந்து வருகிறார். மூத்தவருடைய ஒரு குமாரர்க்கு விவாஹமும் மற்றொரு குமாரனுக்கு உபநயனமும் ஆனிமாத முடிவில் ஸ்ரீபெரும்பூதூரில் நடைபெற்றது. பிறகு காஞ்சியில் நடைபெற்ற பஞ்சஸம்ஸ்கார ஸமயவிசேஷக் காட்சியிது.

... ...

முந்தின படத்தில் நூதன தம்பதிகளும், அடுத்த படத்தில் மேலே ஸஹோதரர்களும், கீழே அவ்விருவர்தம் சிரஞ்சீவிகளும் காட்சி தருகின்றனர். இவ்வறுவர்க்கும் பகவத்பாகவதாசார்ய கைங்கர்யோபயுக்த தனதான்ய ஸம்ருத்திரஸ்து என்று பேரருளாளன் பெருந்தேவித்தாயார் பதவிணையில் பணிந்து ஆசாஸிக்கிறோம். ...

# திருவாடிப்பூரத்தன்று ஒரு திவ்யாநுபவம்.

சூடிக்கொடுத்த சுடர்க்கொடியின் திருவாடிப்பூர மஹோத்ஸவம் தேசமெங்குந் திகழ்ந்து நடந்தாலும் தேவப்பெருமாள் ஸந்நிதியில் நடைபெறும் இம்மஹோத்ஸவம் ஈடுமெடுப்புமில்லாததென்று அடியேன் துணிபு. பேருருளாளன் ஸந்நிதியில் இம் மஹோத்ஸவம் பதினொருநாள் வெகு அற்புதமாக நடந்து தலைக்கட்டிற்றென்று இதை ஒரே வார்த்தையில் முடித்துக்கொள்ளுகிறேன். திருவாடிப்பூரத்தன்று சிற்றஞ்சிறு காலையில் பரமரஸிகரான ஒரு ஆப்தர் வந்து லோகாபிராமமாக வார்த்தையாடுகையில் "ஆண்டாளுடைய திவ்யஸூக்திகளில் வெறுத்துச் சொல்லும் திருநாமங்கள்—உகந்து சொல்லுந் திருநாமங்கள் என இருவகையுமிருக்குமே; இவ்விருவகையினுள்ளும் முதல் வகையில் சில திருநாமங்களை நினைவுக்கு வந்தவரையில் ஸாதிக்கவேணும்" என்றார். இதைக் கேட்டவுடனே அடியேனுக்கு மஹத்தான உத்ஸாஹமும் குதூஹலமும் உண்டாயிற்று. முதல் வகுப்புத் திருநாமங்களில் நினைவுக்குவந்தவற்றை உடனே விண்ணப்பம் செய்தேன்;

1. தீமை செய்யும் சிரீதரா!
2. இரக்கமேலொன்றுமிலாதாய்!
3. மானமிலாப் பன்றியாந் தேசுடைய
4. குறும்பு செய்வானோர் மகன்.
5. பெண்ணின் வருத்தமறியாத பெருமான்.
6. அல்லல் விளைத்த பெருமான்.
7. ஏலாப் பொய்களுரைப்பான்.
8. தருமமறியாக் குறும்பன். என்றேன்.

இந்த எட்டுத் திருநாமங்களும் வெறுப்புத் தோற்றச் சொல்லுவனவாயிருந்தாலும் இவற்றால் அவன் திருவுள்ளத்திலுண்டாகுமுகப்பு வாசாமகோசரம் என்னவேணும். சொல்லுகிற ஆண்டாளும் நூறு தடாவில் வெண்ணெய், நூறு தடா நிறைந்த அக்கார வடிசில் ஸமர்ப்பிப்பதற்கும் மேலாகவே நினைத்து இந்தத் திருநாமங்களைச் சொல்லியிருக்கின்றாளென்னக் குறையில்லை. *பெய்யுமாமுகில் போல்வண்ணா! உன்றன் பேச்சும் செய்கையும், எங்களை மையலேற்றிமயக்க உன்முகம் மாயமந்திரந்தான் கொலோ!* என்று சொல்லி உடனே 'செய்யதாமரைக் கண்ணினாய்!' என்று விளித்திருக்குமழகை நோக்குங் கால் அவன் செய்யுந் தீமைகளைப் பரமபோக்யமாகக்கொண்டு சொல்லுகின்றமை விளங்க வில்லையா? கண்ணன் விதுரர் திருமாளிகையில் அமுது செய்ததைப்பற்றி க்ஷேபிக்கிற துரியோதனன் "கிமர்த்தம் மூர்க்க ஹேமூட புக்தம் வ்ருஷலபோஜனம்" என்று இழித்துச் சொல்லகில்லாதே "கிமர்த்தம் புண்டரீகாக்ஷ!" என்று சொல்லியிருக்கும்போது ஆண்டாள் (அல்லது கோபிகள்) 'செய்யதாமரைக் கண்ணினாய்!' என்று விளித்ததில் வியப்பில்லைதான். ஆயினும் முரட்டு ஸம்ஸ்க்ருதத்தால் சொன்னது கிடக்க; 'செய்ய தாமரைக் கண்ணினாய்' என்கிற தேனிலினிய தென்மொழி உருக்குவது விலக்ஷணமன்றோ.

க்ருஷ்ணாவதார ப்ரயோஜனத்தைப்பற்றி ஆழ்வார்கள் ஸாதிப்பதும் ஆண்டாள் ஸாதிப்பதும் நோக்கப்படவேண்டும். இவ்விஷயத்தை பக்தர்களுக்கு ஒரு விருந்தாக அளிக்கிறேனிங்கு.

வேதாந்த நூல்கள் எம்பெருமானை ஊனக்கண்ணால் காணத்தகாதவனாக வோதுகின்றன. *ந சக்ஷுஷா பச்யதி கச்சநைநம்* என்றும் *ந மாம்ஸசக்ஷுரபி

வீக்ஷதே தம்* என்றும் வடமொழி வேதம் கூறுவதுபோலவே தென்மொழி வேதமும் *கண்கள் காண்டற்கரியன்* என்றும் *கட்கிலி* என்றும் கூறுகின்றது. இப்படிப்பட்ட எம்பெருமான் "ஸகலமநுஜநயநவிஷயதாம் கத:" என்று கீதாபாஷ்ய ப்ரவேசத்தில் ஸ்ரீ பாஷ்யகாரர் அருளிச்செய்கிறபடியே எல்லாருடைய கண்ணுக்குமிலக்காகி அவதாரம் செய்வது எதற்காகவென்னில்; கீதையில் நான்காமத்யாயத்தில் அப்பெருமான் தானே அவதாரப்ரயோஜனத்தை அருளிச்செய்து வைத்தான்;

"பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்,
தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே."

என்கிற சுலோகம் அவதாரப்ரயோஜனத்தைக் கூறுமது. ஸாதுக்களை ரக்ஷிப்பதற்காகவும், துஷ்டர்களை யொழிப்பதற்காகவும் தருமநெறியை ஸ்வாநுஷ்டானத்தாலே நிலைநிறுத்துவதற்காகவும் தான் வந்து பிறப்பதாகச் சொல்லிவைத்தான். இக்காரியங்களை அவதரித்தே செய்யவேணுமோ? ஸங்கல்ப மாத்திரத்தாலே அனைத்தையும் நிர்வஹிக்கவல்லவனன்றோ அவன். அத்தகைய சக்திவாய்ந்த அவன் *நாட்டில் பிறந்து படாதனபட்டு* என்று நம்மாழ்வாரருளிச் செய்கிறபடியே படாதபாடுகளும் படும்படி நாட்டில் வந்து பிறக்கவும் வேணுமோ? என்று ஒரு சங்கை தோன்றும்; இங்கு நம் ஸ்ரீ பாஷ்யகாரர் அருளிச்செய்வது கேளீர்; துஷ்டர்களைத் தொலைப்பதென்கிற காரியம் ஸங்கல்பமாத்திரத்தினால் ஸாதித்து விடவுங்கூடும்; ஸாதுபரித்ராணம் அப்படி ஸாதிக்கமுடியாது; ஏனென்றால் எம்பெருமானை நேரில் காணவேணுமென்றும் கண்டுபேசவேணுமென்றும் தழுவிமுழுசிப் பரிமாற வேணுமென்றும் விரும்புமவர்களே ஸாதுக்களாதலால் அன்னவர்களை ஸம்ரக்ஷிப்பது ஸங்கல்ப்ஸாத்யமாகாது என்றார் ஸ்ரீ பாஷ்யத்தில். துஷ்டர்களைத் தொலைப்பதுங்கூட ஸங்கல்பஸாத்யமாகாதென்று கருதினார் நஞ்சீயரென்னுமாசிரியர்;

"ஈச்வரன் அவதரித்துப் பண்ணின ஆனைத் தொழில்களெல்லாம்
பாகவதாபசாரம் பொறாமையென்று ஜீயரருளிச் செய்வர்"

என்கிற ஸ்ரீ வசநபூஷணசூர்ணையின் மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்திலே அது காணத்தக்கது.

*சாதுசனத்தை நலியுங் கஞ்சனைச் சாதிப்பதற்கு ஆதியஞ்சோதியுருவை அங்கு வைத்திங்குப் பிறந்த* என்றும், *மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப்பிறந்த* என்றும் இங்ஙனே கீதையை யடியொற்றி அருளிச்செய்திருக்கச் செய்தேயும், ரஸோக்தியாக வேறு சில பிரயோஜனங்களையும் அருளிச்செய்திருக்கக் காண்கிறோம்; *கானாயன் கடிமனையில் தயிருண்டு நெய்பருக நந்தன்பெற்றவானாயன்* என்கிறார் திருமங்கையாழ்வார்; திருவாய்ப்பாடியில் தயிரும் நெய்யும் பாலும் வெண்ணெயும் பாழ்படாமே அவற்றைப் பருகுவதற்காகவே கண்ணன் திருவவதாரமென்கை. கோபிகளின் பேச்சாலே பேசுகின்ற நம்மாழ்வார் *இன்று இவ்வாயர்குலத்தை வீடுய்யத்தோன்றிய கருமாணிக்கச் சுடர்* என்று திருவாய்ப்பாடியை ஸத்தைபெறுவிப்பதற்காகவே கண்ணனவதரித்ததாகக் கூறினர். கோபிகளின் ஸமாதியாலே பேசுகின்ற ஆண்டாளோவென்னில் *கஞ்சன் வலை வைத்தவன்று காரிருளெல்லில் பிழைத்து, நெஞ்சு துக்கஞ்செய்யப் போந்தாய் நின்றவிக்கன்னியரோமை* என்கிறாள்—கம்ஸனிட்ட காவலுக்குத் தப்பிப் பிழைத்துத் திருவாய்ப்பாடியில் வந்து சேர்ந்தது கோபிமார்களை வயிறெரியப் பண்ணவேயென்கை.

இப்பாசுரத்தில் *நெஞ்சு துக்கம் செய்யப் போந்தாய்* என்றவிது வெறுப்புத் தோற்றவிருந்தாலும் கண்ணனால் விளையும் நெஞ்சு துக்கங்கள் பரிஹரிக்கப்பட வேண்டாமல் பிரார்த்திக்கப்படவேண்டும்படியாயே யிருக்கும். நெஞ்சு துக்கம் செய்யப் போந்தாயென்றதற்கு அடுத்தபடியாக *அஞ்சவுரப்பாளசோதை ஆனாடவிட்டிட் டிருக்கும்* என்று கூறியது வெகு அழகு. இதனால் கண்ணனுடைய தீம்புகள் யசோதைப் பிராட்டிக்குப் பரமபோக்யமென்னுமிடம் பெறுவிக்கப்பட்டதல்லவா? *கொந்தளமாக்கிப் பரக்கழித்துக் குறும்பு செய்வானோர் மகனைப் பெற்ற, நந்தகோபாலன் கடைத்தலைக்கே நள்ளிருட்கண் என்னையுய்த்திடுமின்* என்று கண்ணன் செய்யும் தீம்புகளைத் தாராளமாகப் பேசி, அன்னவனிருக்குமிடத்தே தன்னைக் கொண்டுவிடும்படிக்கும், அதுவும் பகலில்லன்றிக்கே நடுநிசியிலே யாகும்படிக்கும் ஆண்டாள் வேண்டினது அவன் கொந்தளமாக்கிப் பரக்கழித்துச் செய்யும் குறும்புகளைத் தான் இரவிலே அநுபவிக்க ஆசைப்பட்டன்றோ. ○

ஒரு நூற்று நாற்பத்து மூன்றுரைத்த ஆண்டாளருளிச் செயலில்
ஒரு நாற்பது பாசுரங்களை யநுபவிப்போமிங்கு.

# நாச்சியார் திருமொழியில் நான்கு திருமொழிகள்.

நாச்சியார் திருமொழியில் *கோழியழைப்பதன் முன்னம்* *மற்றிருந்தீர்கட்கு *கண்ணனென்னுங் கருந்தெய்வம் *பட்டிமேய்ந்தோர் காரேறு' என்னும் நான்கு பதிகங்கள் பேரின்பவெள்ளம் பெருகுவன. இவற்றை ஸாரமாக அநுபவிப்போமிங்கு.

1. **கோழியழைப்பதன் முன்னம்.**—கோபீ வஸ்த்ராபஹார சேஷ்டிதங்கூறும் பதிகமிது. கோபிகள் கண்ணபிரானுடைய விரஹதாபம் ஆறுவதற்காகத் தண்ணீரிலே படிந்து குடைந்தாடநினைத்துப் பின் மாலை யெழுந்திருந்து யமுனையிலே ஒரு துறைக்குச் சென்றார்கள். கண்ணனும் அவர்களுடைய செய்தியை க்ஷணந்தோறும் ஆராய்ந்து அறிந்துகொண்டே யிருக்கிறானே; இங்ஙனமே யிவர்கள் ஒரு மடுவிலே குளிக்கப்போனார்க ளென்றறிந்தவாறே தான் தனியிருக்கமுடியாமல் ரஹஸ்யமாக அவ்வாய்ச்சிகளைப் பின் தொடர்ந்து சென்று அந்தத் துறைக்கே சென்று சேர்ந்து ஒரு மரத்தடியிலே மறைந்திருந்தான். ஆய்ச்சிகளும் வழக்கப்படி தங்கள் ஆடையாபரணங்களைக் கழற்றிக் கரையிலே வைத்திட்டுக் குளிப்பதிலே யூன்றியிருந்தார்கள். அப்போது கண்ணன் அவற்றை அவர்களறியாதபடி கொள்ளைகொண்டு அங்குள்ள தொரு குருந்தமரத்தின் மேலேறி அவற்றையெல்லாம் தானே யணிந்துகொண்டு ஒரு கிளையிலே வீற்றிருந்தான். கோபிகள் குளித்தான பின்பு ஆடையாபரணங்களை வைத்தவிடத்திற் காணாமல் 'இவை எப்படி போயின! யாராலே கவரப்பட்டன!' என்று திசைதோறும் ஆராய்ந்து நோக்கி முடிவாகக் கிளையின்மீது கண்ணனைக் கண்டார்கள். ஆடையாபரணங்கள் அவனது அவயவங்களிலே விளங்குவதையுங் கண்டார்கள். அவற்றைப் பெற்றுக்கொண்டன்றோ இவர்கள் வெளியேறவேண்டும். அந்தோ என் செய்வார்கள்! நீரைவிட்டு வெளிவர முடியாமல் நீரிலே நின்றயர்க்கவேண்டியதாயிற்று. நங்கைமார்க்கு நாணமன்றோ பெருஞ் செல்வமாகவுள்ளது. நீரிலேயே எத்தனை நாழிகை நின்றுகொண்டிருக்க முடியும்? கயல்

தளும் வாளைகளும் விடத்தேளெறிந்தாற்போல் காலைக் கதுவுகின்றன: இவ்வாபத்தில் நின்றும் எங்ஙனம் தப்பிப் பிழைப்பதென்று அலமந்து நிற்கிறார்கள். படாதபாடுகளும் பட்டாவது ஆடையாபரணங்களை அவனிடமிருந்து பெற்றுத்தீரவேணுமே. எப்படியாவது அவனையே யிரந்து பெறுவோமென்று துணிந்து அவனை ஏத்துவதும் இறைஞ்சுவதும் பழிப்பதும் பிரார்த்திப்பதுமாக, கண்ணன் "ஆடை வேண்டுவார் கரைமேலேறி வந்து கைகூப்பித் தொழுது பெற்றுக்கொள்வது" என்று கூற, நாணும் நிறையுமிழக்க மாட்டாத ஆய்ச்சிகள் 'தோழியும் நானும் தொழுதோம்' என்று சொல்லி அவ்வாறுகத் தொழுது அவனை மகிழ்வித்து மனோரதமும் நிறைவேறப் பெற்றார்கள். இங்ஙனே கன்னியரோடு காயபிரான் விளையாடினவாறு அற்புதமாகக் கூறியனுபவிக்கப்பட்டது *கோழியழைப்பதன் முன்னமென்னும் இத்திருமொழியில்.

2. மற்றிருந்தீர்கட்கு. கீழ்ப் பதிகத்தில் இவள்பட்ட ஆர்த்தியை எம்பெருமான் உடனே வந்து பரிஹரித்தருளவில்லை. அந்த ஆர்த்தியோ இவளால் ஆற்றமுடியவில்லை. அவன் திருவுள்ளமானபோது வந்து நம்மைக் கைத்தலம் பற்றுகிறானென்று ஆறியிருக்குந் தன்மையுமில்லையிவளுக்கு. தானே காலால் நடந்து அவனுள்ளவிடத்தேறப் போகப்பார்த்தும் அசக்தியாலே கால் நடைதாராமையாலே தன்னிடத்துப் பரிவுள்ளவர்களை நோக்கி நீங்கள் என்னை யிப்போதே அக்கண்ணபிரானெழுந்தருளி யிருக்குமிடத்திலே கொண்டுபோய்ப் போடுங்கள் என்று, ஒவ்வொரு பாட்டில் ஒவ்வோரிடமாகக் குறிப்பிடுகிறாள்.

"ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந: நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம்" என்கிற பிரமாணவசனத்தின்படி ஸ்ரீமந்நாராயணன் திருப்பாற்கடலிற் பள்ளிகோளை விட்டு மதுரைக்கு வந்தானென்று கேள்விப்பட்டு அங்கே தன்னைக் கொண்டுபோய்ச் சேர்க்கும்படி வேண்டினள் [*மதுரைப்புறத்தென்னை யுய்த்திடுமின்* என்று] முதற்பாட்டில். மதுரையில் அவதரித்தும் உடனே திருவாய்ப்பாடிக்கு வஸுதேவரால் கொண்டுபோய்ச் சேர்க்கப்பட்டானென்று கேட்டு அங்குத் தன்னைக் கொண்டுபோக விரும்பினள் [* ஆய்ப்பாடிக்கேயென்னை யுய்த்திடுமின் * என்று] இரண்டாம் பாட்டில்.

கண்ணபிரான் திருவாய்ப்பாடிதன்னில் *ஏடுத்த பேராளன் நந்தகோபன் தன் இன்னுயிர்ச் சிறுவனாய் வளராநின்றானென்று கேட்டு *நந்தகோபாலன் கடைத் தலைக்கே நள்ளிருட்கணென்னை யுய்த்திடுமினென்றாள் மூன்றாம் பாட்டில். நந்தகோபர் திருமாளிகையிலே விளையாடுவதைவிட்டுத் தூயபெருநீர் யமுனைத்துறைக்குச் சென்றானென்று கேட்டு *எமுனைக்கரைக்கென்னை யுய்த்திடுமினென்றாள் நாலாம் பாட்டில். யமுனைதன்னிலும் காளியநாகங்கிடந்த பொய்கையிலே சென்று நீர்க்கரை நின்ற கடம்பையேறி அக்காளிய னுச்சியில் நட்டம்பாய்கிறானென்று கேட்டு அங்கே தன்னைக் கொண்டுபோகச் சொன்னாள் ஐந்தாம் பாட்டில்.

(ஸ்ரீ பாகவதம், தசமஸ்கந்தத்தில் இருபத்துமூன்றாமத்யாயத்திற் கூறியபடி) யமுனைக்கரையில் நின்றும் கண்ணனால் அனுப்பப்பட்டவர்களும் மிக்க பசியுள்ளவர்களுமான கோபால குமாரர்களின் பிரார்த்தனையினால் மகிழ்ச்சியடைந்த] மஹர்ஷி பத்னிகள்

பலவகை யடிசில்களை யெடுத்துக்கொண்டு கண்ணனும் பலராமனுமிருக்குமிடத்தேற வந்து ஆராதித்தார்களென்று ப்ரஸித்தம். அவ்விடத்திற்கு பக்தவிலோசனமென்ற பெயர்; அங்குத் தன்னைக் கொண்டுபோய்ச் சேர்க்கும்படி கோரினள் ஆறும் பாட்டில். ப்ரலம்பாஸுரனைக் கொல்வதற்காகப் பலராமன் பாண்டிவடமென்கிறவிடம் செல்ல, அவனோடுகூடவே கண்ணபிரானுமங்குச் சென்றானென்று கேள்விப்பட்டு அங்கே தன்னைக் கொண்டுசேர்க்க விரும்பினள், [*பிலம்பன் தன்னைப் பண்ணழியப் பலதேவன் வென்ற பாண்டிவடத்தென்னை யுய்த்திடுமின்* என்று] ஏழாம் பாட்டில்.

இந்திரனுக்குப் பூஜையாக இடும் சோற்றைக் கண்ணன் கோவர்த்தனமலைக்கு இடச் சொல்லி அதை முற்றும் தானே யமுதுசெய்ய, இந்திரன் பசிக் கோபத்தினால் ஏழு நாள் விடாமழை பெய்வித்து ஆநிரையையும் ஆயர்களையும் துன்புறுத்த, குன்றெடுத்தாநிரை காப்பதற்குக் கண்ணன் சென்றானென்று கேட்டு அக்கோவர்த்தனத்தருகே தன்னைக் கொண்டு சேர்க்கும்படி வேண்டினள் எட்டாம் பாட்டில். கண்ணபிரான் காலயவனனுக்கு அஞ்சினவன்போல மதுராபுரியில் நின்றும் வேறோரிடஞ்சென்று அங்கே த்வாரகாபுரியை யமைத்து எழுந்தருளியிருப்பதாகக் கேட்டு அங்கேறத் தன்னைக் கொண்டு சேர்க்கும்படி வேண்டினள் [*சூட்டுயர் மாடங்கள் சூழ்ந்து தோன்றும் துவராபதிக் கென்னை யுய்த்திடுமின்* என்று] ஒன்பதாம் பாட்டில். இப்படியாக அந்தந்த ஸ்தல விசேஷங்களில் தன்னுடைய அபிநிவேசாதிசயத்தை வெளியிட்டாளாயிற்று இப்பதிகத்தினால்.



3. **கண்ணனென்னுங் கருந்தெய்வம்.** இப்பதிகத்தில் என்னை யிப்போதே கண்ணபிரானுள்ள ஏதாவதோரிடத்திலே கொண்டுபோய்ச் சேர்த்துவிடுங்களென்று வேண்டப்பட்ட உறவினர்கள் 'அந்தோ! கண்ணபிரான் என்றைக்கோ அவதாரக்ருத்யங்களை முடித்துக்கொண்டு தன்னடிச் சோதிக்குச் சென்று சேர்ந்தானே; இப்போது மதுரையிலாவது திருவாய்ப்பாடியிலாவது யமுனையிலாவது என்ன இருக்கிறது!, அங்கே இவளைக்கொண்டு சேர்ப்பதனாலென்ன பயனாகும்? இவ்வுண்மையை வெளியிட்டாலோ இவளுடைய துயரம் இன்னமும் அதிகரிக்குமேயல்லது இறையும் குறையமாட்டாது; ஆகவே வேறொரு வழியாலே இவளைத் தேற்றவேணுமத்தனை' என்றெண்ணி 'அம்மா கோதாய்! இப்போது கார்காலமன்றோ; எங்கும் புறப்படவியலாதுகாண்; சிறிது தாமதம்; பொறுத்துக்கொள்; பிறகு அவசியம் அழைத்துச் செல்வோம்; அதுகாறும் கோவிந்தன் குணம்பாடி ஆவிகாத்திரு; மேலும் பெண் பிறந்தார்க்கு இத்தனை பதற்றம் தகாது' என்று ஹிதமாகச் சொன்னார்கள். அது கேட்ட கோதை 'என்னை நீங்கள் அங்குக் கொண்டு செல்ல மாட்டீற்றிலீர்களாகில் அவனிடமிருந்தாவது ஏதாவதொரு ப்ரஸாதத்தைக் கொணர்ந்து எனக்குத்தந்து என்னைப் பிழைப்பூட்டுங்கள்; பெண்ணின் வருத்தமறியாத பெருமானுடைய திருவரையில் சாத்தின பீதகவாடையைக் கொண்டுவந்து என் வாட்டந் தணிய வீசுங்கள்; அவனது திருத்துழாயைக் கொணர்ந்து எனது குழலில் சூட்டுங்கள்; அவன் திருமார்பிலணிந்த வனமாலையைக் கொணர்ந்து எனது மார்பில் புரட்டுங்கள்; அவ்வாராவமுதப் பெருமானுடைய அமுதவாயிலூறிய நீரைக் கொணர்ந்து என் வாயில் கொட்டுங்கள்; அத்திருமால் ஊதிவருகின்ற குழலின் துளையில் கொழித்தெழுந்த அமுதப் புனலைக் கொணர்ந்து எனது முகத்தே தடவுங்கள்; அப்பெருமான் நடந்து செல்லும்

வழியிலுள்ள பொடியைக் கொணர்ந்து என்னுடம்பிலே பூசுங்கள் என்றிப்படி பலவுஞ் சொல்லி ஒருவாறு தன்னுற்றாமையைத் தீர்த்துக்கொள்ள வழி தேடுகிறாளிப்பதிகத்தில்.

4. பட்டிமேய்ந்தோர்காரேறு. பரம காருணிகனான பெருமாள் தன்னை யுகப்பாரைத் தானுகப்பனென்னுஞ்சொல் பொய்யாக்க வல்லவனல்லனே. அன்பர்களின் அபீஷ்டத்தை அழகாகப் பூர்த்திசெய்ய வல்லவனன்றோ. தன்னை முற்றூட்டாக அனுபவிப்பதற்குவேண்டிய ஆர்த்தியை வளர்த்திப் பிறகு பரிபூர்ணானுபவத்தை யளிப்பவனாயிற்றே. அப்படியே மிகமிக வளர்ந்த ஆர்த்தியையுடைய கோதைக்கு மிகுந்த அன்போடு தன்னைக் காட்டிக்கொடுக்கையாகிற திவ்யானுபவத்தை யருள்செய்தனன். ஸ்ரீவைகுண்டத்திலிருக்கிற விருப்பை ஸ்ரீ கஜேந்திராழ்வானுக்குக் காட்டிக்கொடுத்தது போல விருந்தாவனத்திலே வாழ்ந்தபடியை ஆண்டாளுக்குக் காட்டிக்கொடுத்தருளினன். அந்த அற்புதமான அநுக்ரஹத்தை விலக்ஷண ஸம்வாதமுகத்தாலே வெளியிடுவதாயிற்று இப்பதிகம். தானொருத்தியேயான கோதை இரண்டு தோழிகளின் தன்மையை ஏற்றுக்கொண்டு ஒருத்தி வாக்காலே கேள்வி கேட்பதும் மற்றொருத்தி வாக்காலே விடையிறுப்பதுமாக அமைத்து நந்தன் மைந்தனைத் தான் நன்றாகக் கண்டநுபவித்தபடியைப் பேசி இத்திவ்ய பிரபந்தத்தைத் தலைக்கட்டினளாயிற்று. இப்பதிகத்தில் இறுதிப் பாசுரமொன்றொழிய மற்றைப் பாசுரங்களொன்பதிலும் முன்னடிகள் வினாவாகவும் பின்னடிகள் விடையாகவுமமைந்துள்ளன. பலராமனுக்குத் தம்பியாய் யதேஷ்டமாகத் திரியுமவனாய் என்னைப் பிரியவிட்டு வாட்டுமவனாய் ஏலாப் பொய்களுரைப்பவனாய் என்னைத் தன் கண்வலைப்படுத்தித் துடிக்கவிடுபவனாய் தருமமறியாத குறும்பனாய் வலக்கையாழியிடக்கைச் சங்கமுடையவனான பெருமானைக் கண்டதுண்டோ? என்று வினவுவதும், இட்டமான பசுக்களை யினிது மறித்து நீரூட்டி விளையாடவும் பெரிய திருவடியின் சிறகின் கீழே வீதியாரவரவும் களிறும்புள்ளும்மடிய வேட்டையாடிவரவும் விருந்தாவனத்தே கண்டேனென்று விடையிறுப்பதுமாக இட்டுத் தன்னனுபவானந்த மிகுதியைக் கூறி முடித்தாளாயிற்று. ... ... ... ... ...

# கண்ணன் ஏலாப்பொய்களுரைத்த விசித்திரம்.

[ஒருத்தியின் வீட்டினுள்ளே புகுந்து வெண்ணெய்க் குடத்தினில் கையிட்ட கண்ணனைக் கண்டு கோபி கேட்பதும் கண்ணன் விடையிறுப்பதும்.]

**கோபி:**—(கஸ் த்வம் பால!) பயலே! யாரடா நீ?

**கண்ணன்:**—(பலாநுஜ:) நான் தெரியாதா? நான் பலராமன் தம்பியல்லவா?

**கோபி:**—(கிமிஹ தே?) அப்படியா? ஸரி; இங்கு எதற்காக வந்தாய்?

**கண்ணன்:**—(மந்மந்திராசங்கயா) இப்பாடியில் மனைகளெல்லாம் ஒரே சாயலாயிருப்பதால் என்மனையென்று மயங்கி வந்துவிட்டேன்.

**கோபி:**—(யுக்தம் தத், நவநீதபாண்ட குஹரே ஹஸ்தம் கிமர்த்தம் ந்யஸ்தா:?) உன்மனையாக மயங்கி வந்துவிட்டது ஸரிதான்; உள்ளே வந்த பின்பு இது உன்மனையன்று

என்று தெரிந்திருக்குமே; அப்படியிருக்க, வெண்ணெய்த் தாழியினுள் கைவைத்தாயே, அது ஏன்?

**கண்ணன்** :—(மாத:! கஞ்சஸ வத்ஸகம் ம்ருகயிதும்) ஆய்ச்சீ? அதைப்பற்றிக் கேட்கிருயோ? உண்மையுரைக்கின்றேன் கேள். நான் கன்று கறவைகளை மேய்ப்பவனென்பது உனக்குத் தெரிந்திருக்குமே; அக்கன்றுகளில் ஒரு கன்று எங்கேயோ தவறிவிட்டது; அது இங்கே புக்கு ஒளித்திருக்கின்றதோவென்று தேடிப்பார்க்க இந்தத் தாழியில் கையிட்டேனத்தனை; வேறொன்றுமில்லை.

(இதைக்கேட்ட கோபியானவள் 'பயலே! நீ சொல்வது வெகு நன்றுயிருக்கிறது; கன்றுகுட்டி கெட்டுவிட்டதாம், அதை வெண்ணெய்த்தாழியில் தேடுகிருயாம். செய்தி வெகு நன்றுயிருக்கிறது' என்று சொல்லிக்கொண்டே ஓங்கியடிக்கப் புகுந்தாள். உடனே கண்ணன் அழத்தொடங்கினுன். அதுகண்ட கோபி இது யசோதைக்கு எட்டுமாகில் என்னுகுமோ என்றஞ்சி)

**கோபி** :—(மா கா விஷாதம் கஷுணுத்) பயலே! அழேலழேல்; உனக்குவேண்டிய வெண்ணெய் தருகிறேன், பெற்றுக்கொண்டு அழாதே செல்வாயாக என்றுள். கண்ணன் வெண்ணெயைப் பெற்று உண்டு மிக்க மகிழ்ச்சியோடு வெளியேறினுன்.

# யாத்திரைகளைப்பற்றி

முற்காலத்துப் பெரியார்கள் பல் யாத்திரைகள் செய்து கொண்டிருந்தார்கள். திருவேங்கடயாத்திரை, திருவணையாத்திரை, காசீயாத்திரை, வதரியாத்திரை என்னுமிந்த நான்கு யாத்திரைகள் விசேஷமாக நடந்துகொண்டிருந்தன. ரைல்பாதை ஏற்படாத காலம் அடியேனுக்குத் தெரியாதாகிலும் அக்காலத்தில் யாத்திரைசெய்த சில பெரியார்களின் மூலமாக யாத்திரையின் வைபவங்களைக் கேள்விப்பட்டிருக்கிறேன், வடநாட்டு பைராகிகள் தோளில் மூட்டைகளைத் தொங்கவிட்டுக்கொண்டு கால்நடையாக (இற்றைக்கும்) போவதுபோல நம்மவர்கள் பாதசாரயாத்திரை செய்ததாகத் தெரியவில்லை. பெரும்பாலும் மாட்டுவண்டிகளை ஏற்பாடு செய்துகொண்டு மாதக்கணக்கில்தான் யாத்திரைசெய்து வந்தார்களாம். இப்போது நாள்கணக்குக் கூட இல்லை, நாழிகை கணக்குத்தான். இந்த யாத்திரைகளுள் பதரிகாச்ரமயாத்திரை யென்பது மிகப் பெரிது. ரைல்பாதை ஏற்படாதகாலத்தில் நம்மவர்களில் பதரியாத்திரை செய்தவர்கள் மிகுமிகச் சிலரேயாவர். ரைல்பாதை ஏற்பட்டபிறகுங்கூட பதரிகாச்ரமம் சென்று ஸேவிப்பது மிகவும் ச்ரமஸாத்யமாகவேயிருந்தது. ஹரித்வாரம் ஹ்ருஷீகேசம் வரையில் ரைல்மார்க்கம் ஏற்பட்டிருந்தாலும் அதற்குப்பிறகு ஏறக்குறைய 180 மைல் நடந்து செல்லவேண்டிய கஷ்டமிருந்தகாலத்தில் நமது நாட்டினர் அதிகமாக வதரியாத்திரை செய்ய முன்வரவில்லை. நாளடைவில் ஹ்ருஷீகேசத்திலிருந்து சிறிது சிறிதாக பஸ் ஸௌகரியம் ஏற்படத் தொடங்கிற்று. முதலில் தேவப்ரயாகை வரையில் ஏற்பட்டது. பிறகு கீர்த்திநகர் வரையில், அதன்பிறகு இடையில் மூன்று மைல் விட்டு ஸ்ரீநகரிலிருந்து கர்ணப்ரயாகை வரையில். அதன்பிறகு சமோலி வரையில்; அதன்பிறகு பிப்பல்கோடி வரையில். பிறகு ஜோஷிமட்

வரையில். இப்போது பதரீநாத் வரைக்குமே பஸ் போக்குவரத்து ஏற்பட்டுவிட்டது. ஹரித்வாரத்திலிருந்து அல்லது ஹ்ருஷீகேசத்திலிருந்து மூன்றாவது நாளில் வதரிசேரும்படியான ஸௌகரியம் ஏற்பட்டுவிட்டது. இதனால் இப்போது பதரியாத்திரை செல்பவர்கள் அதிகமாகத் தேறுகிறார்கள்.

இதில் முக்கியமாக நாம் தெரிவிப்பது யாதெனில்; இவ்விதமாக யாத்திரை செய்வதில் யாதொரு ரஸமுமில்லை. வதரியைக் காட்டிலும் வதரியின் மார்க்கமே மிகச் சிறந்தது. திருமாலிருஞ்சோலையை வருணிக்கின்ற பெரியாழ்வார் "ஆயிரமாறுகளும் சுனைகள் பலவாயிரமும், ஆயிரம் பூம்பொழிலுமுடை மாலிருஞ்சோலையதே" என்று அருளிச்செய்கிறார். அங்கு பூம்பொழில்களைக் காண்கிறோமேயொழிய ஆயிரமாறுகளையும் பலவாயிரம் சுனைகளையும் நாம் காணப்பெறுகின்றிலோம். பதரிகாச்ரம மார்க்கத்திலோவென்னில் இவற்றை மிகவதிகமாகவும் காணுகின்றோம். அந்த வழியின் போக்யதை வாசாமகோசரம். காலைவேளைகளில் ஐந்தாறு மைலும், மாலைவேளைகளில் ஆறேழு மைலுமாக நடந்து சென்று ஸேவிப்பவர்களுக்கு உண்டாகுமானந்தம் அவரவர்களின் உள்ளத்திற்கே தெரியவரும்.

எவ்விடத்தில் சிரமம் தோன்றினாலும் அங்கே தங்குவதற்கு வழி முழுவதும் ஸௌகரியமிருக்கின்றது. அப்படி தங்குமிடங்களுக்கு சட்டியென்று பெயர். நூற்றுக் கணக்கான சட்டிகளிருக்கின்றன. எவ்விடத்திலும் எவ்விதமான பயமும் கிடையாது. இரவிலும் வழிநடந்து செல்லலாம். அர்ச்சிராதி மார்க்கமென்று நாம் சாஸ்த்ரங்களாலறிகிறோம். ப்ரத்யக்ஷமான அர்ச்சிராதி மார்க்கம் பதரிகாச்ரம மார்க்கமே.

அடியேன் மூன்றுவிசை வதரியாத்திரை செய்தேன். முதல் யாத்திரை செய்த போது பஸ் மார்க்கம் அதிகமாக ஏற்பட்டிருக்கவில்லை. அப்போது தண்டிகையில் பயணமென்று பெயர்வைத்துக் கொண்டாலும் பெரும்பாலும் நடந்தே சென்றேன். அப்போது உண்டான ஆத்மாநந்தம் அளவிடமுடியாதது. ஒரு ஸமயம் வதரி ஸேவித்துத் திரும்பி வருகையில் கீர்த்திநகர் வந்து சேர்ந்தபின், அங்கிருந்து தேவப்ரயாகை வரையில் வழியில் மண்மேடுகள் சரிந்துவிழுந்து பஸ் போக்குவரத்து தடைபட்டிருந்தது. அதனால் கீர்த்திநகரிலிருந்து தேவப்ரயாகைக்குக் குறுக்குவழியில் நடந்துசெல்ல நேர்ந்தது. காலை 15 மைல் நடந்து ஒரு சட்டியில் விச்ரமித்து ஸ்நான போஜநாதிகளை முடித்துக்கொண்டு மாலை 15 மைல் நடந்துசென்று தேவப்ரயாகை சேரலாயிற்று. அப்போது அடைந்த ஆனந்தத்தை அநுதினமும் அநுஸந்திக்கின்றேன். இங்ஙனே குறுக்குவழிகள் அங்காங்கு பலபலவுண்டென்று கேள்விப்பட்டேன். அந்த வழிகளிலெல்லாம் ஸஞ்சரிக்க ஆசையுண்டாயிற்று. ப்ராப்தமான வழியிலும் ஸஞ்சரியாமல் பஸ்ஸில் ஏறிப் பலகாதங்களை இரண்டு மூன்று மணிகளில் கடந்துவிடுவதென்பது வதரியாத்திரைக்கு உற்றதன்று. ப்ராப்யஸ்தலத்தோடு மார்க்கஸ்தலத்தோடு வாசியற்றிருப்பதை உணரவேணும்.

வட திருவேங்கட யாத்திரையும் இப்போது பஸ் வசதி ஏற்பட்ட பின்பு நொடிப்பொழுதில் முடிவதாயிருக்கின்றது. எனினும் பல பக்தர்கள் படி வழியே ஏறிச்சென்று களிக்கும்படியைக் காணுகின்றோம். இஃது எப்படியாயினுமாகுக; பதரிகாச்ரம மார்க்கத்தின் ரமணீயகமும் போக்யதையும் அநந்ய ஸாமாந்யமென்னத் தட்டில்லை. "நெறிபட அதுவே நினைவது நலமே" என்று திருமாலிருஞ்சோலையைப்பற்றி ஆழ்வாரருளிச் செய்தது இதற்குமொக்கும். ... ... ...

# கடிதங்கள்

## 1. ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவம்

திருநாங்கூரைச் சேர்ந்த திருவெள்ளக்குளமென்னும் அண்ணன் பெருமாள் கோயிலில் ஸ்ரீமதுபயவே. ப்ரதிவாதிபயங்கரம் திருவேங்கடாசார்யர் ஸ்வாமிக்கு நேற்று ஆடி மிருகசீர்ஷ நக்ஷத்ரத்தில் (22—7—68) ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவம் வெகு சிறப்பாக நடந்தேறியது. நாலாயிர திவ்யப்ரபந்த ஸேவையும் ஸம்ஹிதாபாராயணமும் ஸ்ரீ ராமாயண படனமும் ஐந்து நாட்கள் செய்விக்கப்பட்டது. இந்த ஸ்வாமிக்குச் சிலவாண்டுகட்குமுன்பு காஞ்சீபுரம் ப்ரதிவாதிபயங்கரம் ஸ்வாமியால் பரமார்த்தரத்ன மென்கிற விருது அளிக்கப்பட்டிருந்ததை அனைவருமறிவர். சித்ரகூடம். அஷ்டகோத்ரம். உவே. வெங்கடாசாரியஸ்வாமி, திருக்கடல்மல்லை. ப்ரதிவாதிபயங்கரம். அனந்தாசாரியர் ஸ்வாமி முதலான வித்வான்கள் எழுந்தருளியிருந்து உபந்யாஸங்கள் நடத்தி இவ்வுத்ஸ வத்தை மிகச் சிறப்பித்தார்கள். திருநக்ஷத்திரத்தினன்று ஸன்னிதியிலிருந்து விசேஷ மரியாதைகள் சிறப்புகள் ஸ்தலாசார்ய புருஷத்வத்திற்கு ஏற்றபடி ப்ராப்தமாயின. ஸ்வாமி நீடூழி வாழவேணுமென்று பலரும் பல்லாண்டு பாடினர்.

இப்படிக்கு எம்பார். V. ரெங்காசாரி, சீர்காழி.

## 2. ப்ரஹ்மஸ்ரீ (மயிலை) R. ராமசந்திர சாஸ்த்ரியாரவர்களின் கடிதம்.

சென்னை மாநகரில் வாழும் பரமவைதிக வம்ச்யரான R. ராமசந்திர சாஸ்த்ரி யவர்கள் நமக்குப் பலவாண்டுகளாகப் பரமஸ்நிக்தர். விவேகிகளில் தலைவராகக் கொள்ளப் பட்டவர். இவர் நமது ஸ்ரீ ராமாநுஜனை நெடுநாளாக அநுபவித்துவருகிறார். சென்றவிதழில் (நெ. 235ல்) "வைதிக மநோஹரா (163ன்) விஷயாநுவாதம்" என்ற நீண்ட வியாஸத்தை வாசித்த இப்பெரியார் "எனக்கு ஸம்ஸ்க்ருதத்தில் பரிபூர்ணப்ரஜ்ஞை இல்லாவிடினும் உள்ள ப்ரஜ்ஞையைக்கொண்டு தங்கள் ஸம்ஸ்க்ருத வியாஸத்தைப் புரிந்துகொள்ளப் பார்க்கிறேன்; வைதிக மநோஹராவை எனக்கும் அனுப்பிவர வேண்டுகிறேன்; முன்னம் நெ. 163 கிடைக்கச் செய்யவேணும்" என்றெழுதினர். அப்படியே அந்த ஸஞ்சிகையை அவர்க்கு அனுப்பினேன். அவர் அதை வாசித்து இரண்டு நாளில் எழுதின கடிதம்— "தங்களுடைய ஸம்ஸ்க்ருதம் தமிழ்போலவே லலிதமாக இருந்தபடியால் அநாயாஸ மாகவே வாசித்து விஷயங்களைப் புரிந்துகொண்டேன். இதை இங்குள்ள ஸ்ரீ வைஷ்ணவ பண்டிதர்களும் வாசித்தால் நல்லதென்று எனக்குத் தோன்றி ஸ்நிக்தர்களான ஸ்ரீ வைஷ்ணவர்களையழைத்தேன். சிலர் எங்களுக்கு வேதந்தான் வரும் என்று சொல்லிப் போய்விட்டார்கள்; சிலர் நாங்கள் பூர்வாபர உபாத்யாயர்கள் என்று கூறிச் சென்றனர். சிலர் (பண்டிதர்கள்) பூர்த்தியாக வாசித்துப் பார்த்து 'அந்த ஸ்வாமி இப்படித்தான் எழுதுவது வழக்கம், இப்படி எத்தனையோ எழுதியிருக்கிறார்' என்று ஒருவர்தப்பாமல் ஒரேவிதமாகச் சொல்லிப் போனார்கள். இதற்கெல்லாம் ஸமாதானமில்லையோ? என்றேன். சிரித்துக்கொண்டே போய்விட்டார்கள்." ... R. Ramachandran.

## கடிதம்—3.

# The Little Flower Co.,

Publishers & Booksellers.

25—7—1968

[சென்னை லிப்கோ ஆபீஸ் மிகவும் பிரஸித்திபெற்றது. அதன் தலைவரான ஸ்ரீமதுபயவே. V. கிருஷ்ணஸ்வாமி சர்மா அவர்கள் நமக்கு நீண்டகாலமாக அன்பர். சென்ற ஸ்ரீ ராமாநுஜனிதழில் (235ல்) அவர்களுடைய கடிதங்கள் வெளியிடப்பட்டிருந்தன. அதில் முடிவில் சில வரிகள் வெளிவந்திருந்ததுபற்றி நாம் அநுதாபங்கொள்ளும்படியாக அவர்களிடமிருந்து கிடைத்த கடிதத்தை இதன்கீழ்ப் பிரசுரிக்கிறோம்.]

ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி ஸ்ரீ P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள் அவர்கள் திவ்யசமுகம். அனந்தகோடி நமஸ்காரம். உபயகுசலோபரி.

எங்கள் ஸ்தாபனத்தின் ஸ்ரீகார்யம் ஸ்வாமிக்கு தாங்கள் அனுக்ரஹித்த 23-7-68 ஸ்ரீமுகம் கிடைத்தது; தன்யர்களானோம். மீண்டும் தங்கள் ஸந்நிதியில் ஒன்று தெரிவித்துக் கொள்ளுகிறோம். அதாவது, எங்கள் பெரியவருக்கு எல்லா பெரியவர்களிடமும் அதிக மரியாதை உண்டு. "எவர் மனதும் நோகக் கூடாது" என்று பலதடவைகள் கூறி வருகிறார். அவர் தங்களிடம் வைத்திருக்கும் அன்பும், மரியாதையும் அளவுகடந்தது. பல ஆண்டுகளுக்குமுன் விழுப்புரம் ஆற்காடு பிரஸ்ஸில் தங்கள் பாகதாளிபட்டதிலிருந்து எங்கள் எல்லோருக்கும் இந்த மரியாதை தொடர்ந்து வருகிறது. தவிர, எங்கள் பெரியவருடைய தமையனார் காலஞ்சென்ற ஸ்ரீ D. திருவேங்கடாசாரியர் அவர்களுக்கும் அவர் சம்பந்தி ஜாம்ஷெட்பூர் ஸ்ரீ ராமரத்னம் அய்யங்கார் அவர்களுக்கும் தங்களிடமுள்ள மரபெரும் பக்தியை அறிவோம். சுருங்கச் சொன்னால், தங்களைப் போற்றிவரும் லக்ஷக் கணக்கான மக்களில் நாங்களும் ஒருவர்.

எனவே, தாங்கள் பரமகிருபையுடன் இப்போது அனுப்பியுள்ள 23—7—68உ ஸ்ரீமுகம் எங்களுக்குத் தைரியம் தந்துவிட்டது. நன்றி ரொம்பவும் கூறுகிறேன்.

ஒரு பரோபகாரம் எங்களுக்குச் செய்யவேண்டுமென்று கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறேன்: ஸ்ரீ ராமாநுஜன் ஜூபிலீ இதழில் வெளியான எங்கள் சம்பந்தமான விஷயத்தைப் பார்த்த பலர் எங்களைத் தவறாக எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். தங்களுடைய வார்த்தைகள் அதிக மதிப்பானதால் சிலர் எங்களைப்பற்றி குற்றங்கூறவும் ஆரம்பித்துவிட்டார்கள். இதை மாற்ற, தங்கள் அடுத்த இதழ் ஸ்ரீ ராமாநுஜனில், "நாங்கள் நல்ல காரியங்களை ச்ரத்தையுடன் செய்கிறோம்" என்று ஒரு வார்த்தை எழுதி காப்பாற்ற ப்ரார்த்திக்கிறோம்.

தங்கள் அன்பும், ஆசீர்வாதமும் என்றும் எங்களுக்கு வேண்டும்.

அனந்தகோடி நமஸ்காரம்.

V. வெங்கடேச அய்யர், மானேஜர்.

---

இக்கடிதத்தை மிகவும் ஆமோதிக்கிறேன். உலகமும் ஆமோதிக்கும். ... P.B.A.

இந்த மகுடத்தின் கீழ் அடியேனெழுதிவரும் கட்டுரைகளில் இது பன்னிரண்டாவதாகும். சென்ற பிலவங்க வருஷம் புரட்டாசி மாதச் சஞ்சிகையானு ஸ்ரீராமாநுஜன் 225-ல் இது ஆரம்பம் செய்யப்பட்டது. ஆரம்பத்தில் அடியேனெழுதியுள்ளதை இங்குச் சிறிது நினைவூட்டுகிறேன்;—

"நிகழும் பிலவங்க ஸம்வத்ஸரம் பங்குனித்திங்களில் அடியேனுடைய எழுபத்தேழு பிராயப் பூர்த்தியை முன்னிட்டு, கீழ்வருஷங்களின் வழக்கப்படியே எழுபத்தேழு லக்கங்கொண்ட சில வியாஸங்களை யெழுதத் தொடங்கியுள்ளேன். இங்ஙனே வடமொழியிலும் ஒன்று எழுதி அடியேனுடைய வைதிக மநோஹரா பத்ரிகையில் வெளியிட்டு வருகிறேன். ...இங்கு எழுதத் தொடங்குவது எழுபத்தேழு பெரியார்களின் பெருமை யென்பது. பெரும்பாலும் உலகம் மதிக்கத் தக்கவர்களாயிருந்து அடியேனால் நெருங்கிப் பழகியநுபவிக்கப்பட்டவர்களுமாயிருந்து வைகுண்டவாஸிகளான பெரியார்கள் எழுபத்தெழுவரை [க்ருஹஸ்தர்களும் உத்தமாச்ரமிகளுமானவர்களை] ப்ரஸ்தாவித்து அடியேனுடைய பழக்கத்தில் தெரிந்தமட்டில் அப்பெரியார்களின் பிரபாவங்களைச் சுருங்க வெளியிட உத்தேசம். தென்கலை வடகலை வாசிபாராமல் உபயகலைப் பெரியார்களையும் அநுபவிப்பேன். இதனால் பின்புள்ளவர்கள் மிக்கபயன்பெறுவார்களென்பது அடியேனுடைய அபிஸந்தி." என்று ஆரம்பத்திலெழுதியிருக்கின்றேன். இதுகாறும் [நெ. 235 வரையில்] அறுபத்தொன்பது பெரியார்களை ப்ரஸ்தாவித்து அவர்களின் பெருமைகளை நாதிஸம்க்ஷிப்த விஸ்த்ருதமாத வரைந்தாயிற்று. அடியேனுடைய உத்தேசத்தில் கொண்ட எழுபத்தேழு ஸ்வாமிகளில் இன்னும் எண்மர் மிகுந்துள்ளார்கள். ஆலோசிக்கையில், அடியேனுடைய வாழ்நாளில் அனுபவிக்கப்பட்டவர்களும் வைகுண்டவாஸிகளுமான பெரியார்கள் இன்னும் அறுபதின்மர் எழுபதின்மர் தேறக்கூடும். ஆனாலும் ஆரம்பத்தில் கொண்ட கொள்கையின்படி எழுபத்தேழு என்கிற லக்கத்தை இப்போது ஒருவாறு பூர்த்திசெய்ய ப்ராப்தமாகிறது. பிறகு அந்தர்யாமியான எம்பெருமான் நியமிக்கிறபடியாகிறது. இதுவரையில் அநுபவிக்கப்பட்ட பெரியார்கள் அறுபத்தொன்பதின்மரை அடியேன் மட்டுமன்றிக்கே, பெரும்பாலும் உலகமறியும். அறிந்தவர்கள் பரமஸந்தோஷமாகத் தெரிவித்து வருவதிலிருந்து அடியேனும் பரமஸந்தோஷமடைந்து வருகிறேன். அடியேன் செய்யும் தொண்டுகளில் இது மிகச் சிறந்த தொண்டென்று பலரும் தெரிவிக்கிறார்கள்; அடியேனுள்ளமும் இங்ஙனமே கொண்டு பூரிக்கின்றது.

பர்த்ருஹரிமஹாகவியின் ஸுபாஷிதங்களில் அடியேன் அடிக்கடி சிந்திக்கும் ஸுபாஷிதம் ஒன்றுண்டு;— *பரிவர்த்திநி ஸம்ஸாரே ம்ருத: கோவா ந ஜாயதே, ஸ ஜாதோ யேந ஜாதேந யாதி வம்சஸ் ஸமுந்நதிம்.* என்பது. அநாதியான இந்த ஸம்ஸாரத்தில் பிறப்பவர்களும் இறப்பவர்களும் எண்ணிலடங்கார்; பிறந்தவர்களெல்லாரும் பிறந்தவர்களல்லர்; எவர் பிறந்ததனால் ஒரு பெருங்கூட்டம் மேன்மையடைகின்றதோ அவரே பிறந்தவராவர்—என்பது இந்த ஸுபாஷிதத்தின் கருத்து. இங்ஙனே பிறந்தவர்கள் அடியேனுக்குத் தெரிந்து நாற்

திசையிலும் எண்ணிறந்தவர்களுள்ளார்கள்? *வைத்தநாள்வரை எல்லை குறுகிச் சென்று* என்கிற ஆழ்வார் பாசுரம் அடிக்கடி நினைவுக்கு வருகின்றது. ஆயுச்சேஷமும் இங்ஙனே பெரியார்களின் குணாநுபவத்தினாலேயே கழியவேணுமென்று பேரருளாளனை ப்ரார்த்தித்துக் கொண்டேயிருக்கிறேன். ... ....*

## 70. விசாகபட்டணம். பரவஸ்து. பட்டநாதஸ்வாமி.

விசாகபட்டணத்தில் பரவஸ்து குடும்பத்தார் இற்றைக்கு முளர். மஹாமஹோபாத்யாய. பரவஸ்து. ரங்காசார்ய ஸ்வாமி யென்பவர் மிகப்ரஸித்தர். அவரை அடியேன ஸேவித்ததில்லை. அவருடைய திருவுருவப்படம் ஸம்பாதித்து வெளியிட்டிருக்கிறேன். இவருடைய பரம்பரையை வித்வத் பரம்பரையென்று வழங்குவர்கள். இவர்கள் பகவத் ராமாநுஜ தர்சன ஸ்தர்களாயிருந்தும் 'ஸ்ரீமதே ராமாநுஜாய நம:' என்று எழுதார்கள்; "நம: பரமர்ஷிப்ய:' என்றே எழுதுவர்களாம். மேலே ப்ரஸ்தாவித்த ரங்காசார்ய ஸ்வாமியின் பௌத்ரர்களில் ஒருவர் பட்டநாதஸ்வாமி யென்பவர் கும்பகோணம் காலேஜில் ப்ரொபஸராயிருந்தவர். மற்றொருவர் திருப்பதி காலேஜில் பலவாண்டுகள் வாழ்ந்து விச்ராந்தரானவர். அவருடைய பரிசயம் அடியேனுக்கு மிகக் குறைவு. பட்டநாதஸ்வாமி யென்பவர் சிறந்த சாஸ்த்ரஜ்ஞர், மஹாமேதாவி. அடியேன் மஞ்ஜுபாஷிணீ பத்ரிகை நடத்திக் கொண்டிருந்த காலத்தில் கும்பகோணத்தில் வாழ்ந்து வந்த அவர் பத்ரிகா மூலமாகவே மிகவும் பரிசிதராயிருந்தார். இவர் தென்கலை ஸம்ப்ரதாயஸ்தராயிருந்தும் உபயஸம்ப்ரதாயக் கொள்கைகளிலும் வைமத்யம் காட்டிக் கொண்டிருந்தார். முமுக்ஷுப்படியில் "உய்யக் கொண்டார் விஷயமாக உடையவர் அருளிச் செய்த வார்த்தையை ஸ்மரிப்பது" என்றொரு ஸ்ரீஸூக்தியுண்டே; அதனை நினைவூட்டுமவராயிருந்தாரிவர். மஞ்ஜுபாஷிணீ பத்ரிகையில் இவர்க்கும் எமக்கும் நிகழ்ந்த லேகப்ரதிலேகங்கள் அபரிமிதம். கடைசியில் மிக்க அநுதாபங்கொண்டு திருத்த முற்றார்.

சென்ற பரீதாவிஸம்வத்ஸரத்தில் (1912ல்) அஸ்மதாசார்யவர்ய ஸ்ரீஜகத்குரு, கார்திஸ்வாமியோடு கூட அடியேன் ஜகந்நாதபுரீ ரதயாத்ரோத்ஸவத்திற்கு விடை கொண்டிருந்து திரும்புகையில் ஸ்ரீஸ்வாமி 'விசாகபட்டணத்தில் ஒருவேளை தங்கிப் போவோம்' என்று ஸாதித்து அப்படியே அங்கு எழுந்தருளின போது இந்த பட்டநாதஸ்வாமி யென்பவர் அங்கிருந்தார். பத்ரிகா ஸம்வாதங்களுக்குப் பிறகு அப்போது தான் ப்ரதமஸந்தர்சனம். "ஆழ்வாராசார்ய ஸ்ரீஸூக்திகளில் அடியேனுக்கு ப்ராவண்ய முண்டாக்கினதற்கு மிகவும் க்ருதஜ்ஞனாயிருக்கிறேன்" என்று ஸ்ரீஸ்வாமி திருமுன்பே அடியேனைக் குறித்துச் சொன்னார். பிறகு சில மாதங்களில் அந்த பட்டநாதஸ்வாமி அகால மரணமடைந்து விட்டார். அவருடைய பாண்டித்யமும் லேகனநைபுணியும் அபிநந்தநீயமாயிருந்தது. ... *

## 71. ஸ்ரீமதுபயவே. சிறுபுலியூர் தொட்டயாசார்யஸ்வாமி.

ஸ்ரீவில்லிபுத்தூரில் மஹாவைபவசாலியாகவும் ப்ரக்க்யாதராகவு மெழுந்தருளியிருந்த சிறுபுலியூர் ஸ்வாமியை ஸ்ரீவைஷ்ணவவுலகமெல்லாமறியும். சிறந்த

சிஷ்யஸம்பத்துவாய்ந்தவர். "ஞானமனுட்டான மிவை நன்றாகவே யுடையனான குரு" என்ற பாசுரத்திற்கு ப்ரதமலக்ஷ்யமாக எழுந்தருளி இருந்தவர். அந்த மஹாஸ்வாமிக்குத் திருக்குமாரர்கள் இருவர். மூத்த திருக்குமாரர் மஹா பண்டிதோத்தமராய் திருத்தகப்பனாரோடு கூடவே வாழ்ந்தவர். இளைய திருக்குமாரர் தொட்டயாசாரியரென்பவர் காஞ்சியில் விவாஹ ஸம்பந்தம் பெற்றவர். பெரும்பாலும் ஸ்ரீபெரும்பூதூரில் வஸித்துவந்தவர் பண்டிதோத்தமராக விளங்கி வந்தார். (செவிடு தொட்டயாசாரியர் என்று இவர்க்கு ப்ரஸித்தி.) இவர் பாணன் பவ்பூதி முதலான கவிகளைப்போன்று கவிதையில் நிகரற்றவராய் விளங்கினார். கத்யபத்யங்கள் அத்யாச்சர்யமாக எழுதுவர். அவரைப்போன்ற எழுத்தாளர் அவரே யென்னலாம். அவர் "விசக்ஷண" என்றொரு ஸம்ஸ்க்ருத பத்ரிகை நடத்த ஆரம்பித்துச் சில மாதங்களே நடத்தினார். அப்போது அவருடைய நட்பு அடியேனுக்கு அதிகமாக விளைந்தது. அவர் இன்னமும் ஜீவித்திருக்கவேண்டியவர். [இனிமேல் எழுதுவது அத்யந்த சோசநீயம்.] அவருக்கு ச்வசுரக்ருஹம் காஞ்சீ ஸன்னிதி வீதியிலாகையால் அடிக்கடி அங்குவரநேரும். ஸந்திக்கிறபோதெல்லாம் சொல்லுவர்—'நான் ஏதோ லௌகிகனாயிருந்துவருகிறேன்; என்னுடைய திருத் தமையனார் மஹாசிஷ்டர், மஹாபண்டிதர்; அவரை நீ ஸந்திக்கவேணும்' என்று. அவருடைய பரிசயமும் பத்ரிகை மூலமாக அடியேனுக்கு ஏற்பட்டிருந்தது. அவர் எங்கும் வெளியில் எழுந்தருளுகிறவரல்லாமையால் நேரில் விடைகொண்டு ஸேவிக்கவேணுமென்று பாரித்துக்கொண்டிருந்தேன். இப்படியிருக்கையில் இந்த தொட்டயாசாரியர் ஒருநாள் காஞ்சிபுரம் வந்து "ஜ்வரத்துடன் இங்கு வந்திருக்கிறேன், நீ வந்துபார்க்கவேணும்" என்று ஸந்தேசமனுப்பினார். அன்று நாதமுனிகள் சாத்துமுறை. ஸாயங்காலம் அவரிடம் சென்று ஒரு நாழிகை வார்த்தையாடிவிட்டு ஸன்னிதிக்குச் சென்று சாத்துமுறை யநுபவித்துக்கொண்டிருக்கையில் 'தொட்டயாசார்யர் பரமபதித்துவிட்டார்' என்று ஒருவர்வந்து சொன்னார். இந்த பரிதாப கதையை இவ்வளவில் நிறுத்தி மற்றொரு பரிதாப கதையெழுதுகிறேன்.

இவருடைய திருத்தமையனாரை சென்று ஸேவிக்கவேணுமென்று பாரித்திருந்தவடியேன் ஒரு மார்கழியில் புறப்பட்டு நம்பெருமாள் ஸன்னிதியிலும் ஆழ்வார் திருநகரியிலும் ஸேவித்துவிட்டு, நாச்சியார் திருமாளிகைக்கு விடைகொண்டேன்; அப்போது ஸ்ரீ வில்லிபுத்தூர் ரைல் மார்க்கம் கிடையாததலால் சாத்தூரில் இறங்கி வண்டிமார்க்கமாய் மாலை 4 மணிக்கு ஸ்ரீ வில்லிபுத்தூருள் நுழைகிறேன். சிறுபுலியூர் ஸ்வாமி திருமாளிகைக்கே விடைகொள்ளவேண்டி அவ்விடம் செல்லுகையில் ஸ்வாமி திருமாளிகை வாசலில் ஸ்ரீ வைஷ்ணவப்ருந்தம் ஸ்ரீ சூர்ண பரிபாலனம் நடத்துகிற ஸந்தர்ப்பம். சிறுபுலியூர் மஹாஸ்வாமி பழுத்த பழமாயிருப்பவர் ப்ராசீநாவீதியாய் நிற்கிறார் வண்டியைவிட்டிறங்கி என்ன விசேஷமென்று விசாரிக்கிறேன்; 'பெரிய திருக்குமாரர் பரமபதித்துவிட்டார்; ஸ்வாமியே சரம கைங்கர்யம் நடத்தவேண்டியதாயிற்று; நடக்கிறது' என்றார்கள். என்ன சொல்லுவேன்! ஆகாயத்தை நோக்கியழுவன் தொழுவனே. திருமுக்குளம் சென்று ஸ்ரீபாததீர்த்தம் சேர்த்துக்கொண்டு நள்ளிரவில் பெரியஸ்வாமியை ப்ரப்ரதமமாக ஸேவித்துவிட்டுப் பாவியேன் என்று நின்றேன். ஸ்வாமியோ

"புஷ்கரபலாசே ஆப இவ" என்னும்படி ஸேவை ஸாதிக்கிறார். அடியேனுடைய வாழ்க்கையில் அடிக்கடி நினைத்துப் பரிதபிக்கும் விஷயமிது. தொட்டயாசார்ய ருடைய திருப்பேரன்மார்கள் இப்போது யசஸ்விகளாய் விளங்குகிறார்கள். இவர்களுடைய திருத்தகப்பனார் [தொட்டயாசார்யர் திருக்குமாரர்] இருந்தபோது ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு விடைகொண்டிருந்த அடியேனைத் திருமாளிகையில் வரவழைத்து 'தேவரீர் எழுதின கடிதங்களையெல்லாம் காப்பாற்றி வைத்திருக்கிறேன், கடாக்ஷிக்கவேணும்' என்று சொல்லி ஒரு தகரக்குழாயில் இட்டுவைத்திருந்தவற்றையெடுத்துக்காட்டினார், போதுமே இந்தப் பரிதாப வரலாறுகள். *

## 72. ஸ்ரீமதுபயவே. ஸாரநாதாசாரியர்ஸ்வாமி.

கீழே (ஸ்ரீராமாநுஜன் 226ல்) ஸ்ரீமதுபயவே, ஆடூர். ரங்கஸாமி ஐயங்கார் ஸ்வாமியின் பிரபாவ மெழுதுகையில் "இந்த ஸ்வாமியின் ஜ்யேஷ்டதுஹிதாவின் குமாரர் ஸாரநாதாசார்யரென்று பரஸித்தராய் இளமையிலேயே மிகச் சிறந்த வித்வானென்று புகழ்பெற்றார்; மாதாமஹர்க்குமேல் சிறந்து விளங்குவரென்று பலரும் கொண்டாடவிருக்கையில் முப்பது பிராயத்திற்குள்ளேயே ஆசார்யன் திருவடி சேர்ந்து விட்டார்" என்று ஸம்க்ஷேபமாக எழுதியிருக்கிறேன். ஸ்ரீமத் குண்டலம் ஸ்வாமியின் அந்தேவாஸிகளில் ஸ்ரீ ஸாரநாதாசாரியர் பரிகணநீயராய் விளங்கினவர். நியாய வேதாந்தங்களைச் கசடறக் கற்றவர், ச்ருதப்ரகாசிகையோடுகூட ஸ்ரீபாஷ்யத்தை திருவல்லிக்கேணி வேதவேதாந்தவர்த்திநீ ஸபையில் பரீக்ஷை கொடுத்து உத்தம ஸன்மானம் பெற்றுவந்த சிலநாட்களில் ஆசாரியன் திருவடி சார்ந்து விட்டார், ஸ்ரீபெரும்பூதூர் ஸன்னிதியில் ப்ரதிபக்ஷிகளின் அதர்க்கணச் செயல்கள் அதிகப்பட்டிருந்த காலத்தில் நீதிமன்றங்களிற் சென்று சிரமப்பட்டு வெற்றிபெற்றவர்களில் இவர் தலைவராய் விளங்கினவரென்று அக்காலத்தில் ப்ரஸித்தியிருந்தது. .... *

## 73. ஸ்ரீமதுபயவே. மோட்டூர் ராகவாசாரியர் ஸ்வாமி.

ஸ்ரீமத் குண்டலம் ஸ்வாமி காலத்தில் ஆந்திர தேசங்களிலிருந்தும் பலர் ஸ்ரீபெரும்பூதூர் வந்து வாசித்து சாஸ்த்ர ப்ரவீணர்களாய் உபய வேதாந்த விசாரதர்களாய் விளங்கினதை அடியேன் இளமை தொடங்கி அனுபவித்தவன். அன்னவர்களில் மோட்டூர் ராகவாசாரியர் ஸ்வாமியென்பவர் (கோதாவரீ ப்ராந்தஸ்தரென்று ஞாபகம்) ஸ்ரீபெரும்பூதூரில் வந்திருந்து கலைகற்று மஹாமேதாவியாய் விளங்கினவர்; நம்முடைய ஸம்பிரதாயார்த்தங்களை ஆந்திர பாஷையில் வெகு சதுரமாக உபந்யஸிக்க வல்லவர். பிறகு கோதாவரீ ப்ராந்தமே சென்று சேர்ந்து பலர்க்கு உபய வேதாந்த ப்ரவசனம் செய்து கீர்த்தி சேஷராயினர். ... *

## 74. ஸ்ரீமதுபயவே பின்னப்பாக்கம் திருவேங்கடாசாரியர் ஸ்வாமி.

ஸ்ரீபெரும்பூதூர் ஸம்ஸ்க்ருத வித்யா சாலையில் நியாய சாஸ்த்ர ப்ரவசன துரீணர்களாய் விளங்கின பண்டிதோத்தமர்களில் பரிகணிதராய்த் திகழ்ந்தவர் இந்த மஹாஸ்வாமி. இவருடன் பிறந்தவர்களான ஸ்ரீஉவே. பின்னப்பாக்கம் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி ராகவாசார்ய ஸ்வாமி என்னுமிருவரும் உபயவேத

# ஸ்ரீ பாஷ்யாதிகரண மெழுபத்தாறு.

## (ஸ்ரீ ராமாநுஜன் 235ன் தொடர்ச்சி)

## 26. ஸர்வதாநுபபத்த்யதிகரணம்.

சாரீரக மீமாம்ஸையில் இரண்டாமத்தியாயத்தின் முதல் பாதம் கீழே முடிக்கப்பட்டுள்ளது, பரப்ரஹ்மமே ஜகத்காரணமென்னுமிடம் அசைக்க முடியாதென்றும், ப்ரதானம் பரமாணு முதலியவற்றுக்கு அது (ஜகத்காரணத்வம்) ஸர்வாத்மநா அஸம்பாவிதமென்றும் தலைக்கட்டப்பட்டது. இப்போது இரண்டாமத்யாயத்தின் இரண்டாவது பாதத்தில் *ஸர்வதாநுபபத்தியதிகரணத்தின் ப்ரமேயம் விவரிக்கப்படுகிறது.



ஸூ. ஸர்வதாநுபபத்தேச் ச. (2-2-30.) ஸர்வசூந்யத்வவாதிகளான பௌத்த ஏகதேசிகளின் பக்ஷம் இங்கு நிரஸிக்கப்படுகிறது. பரப்ரஹ்மமே ஜகத்காரணமென்று நன்கு நிலைநாட்டத் தோன்றிய இந்த அத்யாயத்தில் ஸர்வசூந்யத்வ வாதத்தை நிரஸிக்க என்ன ப்ரஸக்தி யென்று சிலர் நினைக்கக்கூடும். ஜகத்காரணவஸ்து ப்ரதாநமா? பரமாணுவா? பரப்ரஹ்மமா? என்கிற விசாரம் எப்போது பொருந்துமென்னில்; உண்மையில் ஜகதுத்பத்தி யென்பதொன்று நிருபிக்க முடியுமானல் அப்போது பொருந்தும். அடியோடு இல்லாதவொரு பிள்ளைக்கு மாதாபிதாக்களைப்பற்றி விசாரம் செய்வதுண்டோ? ஜகதுத்பத்தியே நிருபிக்கமுடியாததாயிருக்க. எது ஜகத்காரணம்? என்கிற சர்ச்சை ஏதுக்கு? உத்பத்தியானது பாவத்திலிருந்து அங்கீகரிக்கப்படுகிறதா? அபாவத்திலிருந்து அங்கீகரிக்கப் படுகிறதாவென்று கேட்கிறோம். பாவத்திலிருந்த என்பது சேராது; மண்பிண்டத்திலிருந்து பானை முதலியன உண்டாகின்றனவென்றால் மண்பிண்டத்தை உபமர்த்தித்துக் கொண்டுதானே யுண்டாகின்றன. எந்த காரியப்பொருளும் காரணப்பொருளை உபமர்த்தியாமல் உண்டாவதில்லை யென்பதைக் காணுநின்றோம். காரணாகாரத்தின் விநாசந்தானே உபமர்த்தமாவது; அதுதான் அபாவமே. ஆக பாவத்தில் நின்றும் உத்பத்தியில்லையென்று தேறிற்று. அபாவத்தில் நின்றுங்கூட உத்பத்தியில்லையென்பது அநாயாஸமாகத் தெரியவரும். அபாவத்திலிருந்து பாவோத்பத்தி ஸம்பவிக்கமாட்டாதன்றோ. ஆக உத்பத்தியே நிருபிக்க முடியாதிருப்பதால் உத்பத்திக்குப் பிற்பட்டனவான விகாரங்கள் எதுவுமே கிடையாவென்பது ஸித்தம். லோகவ்யவஹாரமெல்லாம் ப்ரமமூலகமே. ஆக சூந்யமேதான் தத்துவம்-என்பவர்கள் இங்கு நிரஸிக்கப்படுகிறார்கள்.



[ஸர்வதாநுபபத்தேச்ச]. ப்ரமேயங்களோ ப்ரமாணங்களோ எதுவும் உண்டாகிலுமாம், இல்லையாகிலுமாம்; பூர்வபக்ஷிக்கு அபிமதமான சூந்யத்வம் தேறாதகையாலே மாத்யமிகதர்சநம் அஸமஞ்ஜஸமென்றபடி. 'ஸர்வம் சூந்யம்' என்று சொல்லுபவர்கள் தங்களுக்கு அபிமதமான இவ்வர்த்தத்தை ஸாதித்துத் தரும்படியான ப்ரமாணமொன்று உண்டென்று இசையும்பக்ஷத்தில் ப்ரமாண ஸத்பாவத்தையிசைந்தபோதே ஸர்வசூந்யவாதம் தொலைந்தது. ப்ரமாணமில்லையென்னும் பக்ஷத்தில், ப்ரமாணமில்லாமையினாலேயே தங்களுக்கு அபிமதமான அர்த்தம்

அஸித்தமென்று முடிந்தது. மேலும், 'ஸர்வம் சூந்யம்' என்கிற இந்தவார்த்தையினுல் நாஸ்தித்வந்தானே விவக்ஷிதமாக வேணும். ஒரு ரூபத்தைவிட்டு மற்றெரு ரூபத்தையடைவதே நாஸ்தி பதார்த்தமாகையாலே ரூபாந்தரத்தாலே அஸ்தித்வமே சொல்லப்பட்டதாக முடிகிறது. மண்ணுண்டை யொன்று இருந்தது. அது நசித்தவளவிலே 'ம்ருத்பிண்டோ நாஸ்தி' என்று சொல்லுகிருன். இந்த வ்யவஹாரத்தில் பானேயென்கிற அவஸ்தைதானே விஷயமாகிறது. அது உள்ளதேயன்ருே.

உலகில் அஸ்தி நாஸ்தித்வங்களே வழங்குகிறவர்கள் 'இப்போது மண்ணுண்டையிருக்கிறது, இப்போது மண்ணுண்டையில்லே; இங்கு மண்ணுண்டை யிருக்கிறது, இங்கு மண்ணுண்டையில்லே? என்றிப்படி இடத்தையும் காலத்தையும் உட்படுத்தியே வ்யவஹரிக்கிருர்கள். தேச காலங்களேச் சேர்க்காமல் வெறுமனே 'மண்ணுண்டை யில்லே' என்கிற ப்ரதீதியோ வ்யவஹாரமோ எங்கும் காண்பதில்லே. 'இப்போது ம்ருத்பிண்டமிருக்கிறது' என்ருே 'இங்கு ம்ருத்பிண்டமிருக்கிறது' என்ருே ஒருவன் வ்யவஹரித்தால் மண் என்னும் த்ரவ்யத்திற்கு பிண்டத்வாவஸ்தை விஷயம். 'இப்போது ம்ருத்பிண்டமில்லே' என்ருே 'இங்கு ம்ருத்பிண்டமில்லே' என்ருே வ்யவஹரித்தால் பிண்டத்வாவஸ்தையின் நாசமாகிய கடத்வாவஸ்தை விஷயம். ஆக நாஸ்தித்வவ்யவஹாரம் பண்ணினுலுங்கூட வேறெரு ஆகாரத்தாலே அஸ்தித்வமே தேறிநிற்கிறதென்பதை ஸர்வாநுபவ ஸாக்ஷிகமாகக் காணலாம். இன்ன வஸ்து இங்கில்லே என்ருல் மற்ருேரிடத்திலுள்ளதாகத் தேறியேதீரும். இப்போதில்லேயென்ருலும் மற்றெருபோதில் உண்டென்றதாகத் தேறியேவிடும். ஆக ஒருபடியாலும் ஸர்வசூந்யவாதம் ஸித்தியாது என்றதாயிற்று.

இனி, ஸூத்ரத்தின்மேலே பொருள் காண்பது எங்ஙனே யென்னில்; ஸர்வதா – ஸர்வப்ரகாரத்தாலும், அநுபபத்தே:— ஸ்வாபிமதமான ஸர்வ சூந்ய வாதம் அநுபபந்ந மாகையாலே என்றபடி, 'ஸர்வப்ரகாரத்தாலும்' என்றதை ஸ்ரீ பாஷ்யாதிகளில் ஸ்வாமி விவரித்தருளும்போது "ஸதிதி ப்ரதிஜ்ஞாயாம் அஸதிதி ப்ரதிஜ்ஞாயாஞ்ச" என்றருளிச்செய்கிருர். சங்கரபாஷ்யத்தில் இவ்விதமாக அர்த்தம் செய்யப்படவில்லே 'அவன் ஸர்வதா அயோக்யன், இவன் ஸர்வதா மூர்க்கன்' என்ருல் இதற்கு எவ்விதமாகப் பொருள் கொள்ளுகிருேமோ அவ்விதமாகவே சங்கராசாரியர் பொருள் கொண்டார். நம்ஸ்வாமி கொண்ட பொருள்தான் உண்மையில் ஸமஞ்ஜஸமானது. ஸ்வாமிக்கு இப்பொருள் தோன்றினது ஏதனுலென்னில்; திருவாய்மொழியில் (1—1—9) * உளனெனிலுளன் அவனுருவ மிவ்வுருவுகள், உளனலனெனில் அவனருவ மிவ்வருவுகள், உளனெனிலனென்னவிவைகுண முடைமையின், உளனிருதகைமையோ டொழிவிலன் பரந்தே* என்ற பாசுரங்கொண்டே இந்த ஸூத்ரத்தின் பொருளே ஸ்வாமி அறுதியிட்டருளினுரென்பது நிஸ்ஸந்தேஹம். அப்பாசுரத்தின் ஆருயிரப்படியை ஸேவித்தால் இஃது எளிதிற் புலனும். அப்பாட்டிற்குத் தமிழ் மொழியாலெழுதப்பட்டுள்ள பொருள்தான் ஸ்ரீ பாஷ்யத்தில் வடமொழியா லெழுதப்பட்டுள்ளதென்க. .... .... ... ... ... ... (26)

# "THE THENNACHARYAS"

**A clarification, with particular reference to Sri Vedanta Desika, currently solicited by some North Indian Scholars.)**

Speaking about the traditional school of philosophic thought, the 'Thenkalai Srivaishnavites are being loosely referred to as 'Thennacharyas' or 'Thennacharya Sampradayees'. There is, however no *per contra* denomination as 'Vadavacharyas', although the terms 'Thenkalai' and 'Vadakalai' are in vogue. As could be seen from the line 'Vadakalai, Thenkalai, vadugu, kannadam' in the opening section of 'Kamba Ramayanam', these four words refer to the four languages (viz.) Sanskrit, Tamil, Telugu and Kannada respectively. It would appear that those Vaishnavites who extend special patronage to Sanskrit go under the name and style of 'Vadakalais' while those, who similary bestow loving care on Tamil, in an extraordinary degree, are known as 'Thenkalais'. None can, however, throw adequate light on the point of time at which these appellations came into being - the mystery of the names of the two languages being applied to their patrons as well. The beauty, rather, the pity of it is that the expressions 'Thenkalai' and 'Vadakalai' have not occurred in any of the works of the 'Poorvacharyas.' But these words have invaded, with a vengeance, the records of the law Courts during the last hundred years and woven a huge volume of forensic literature around them. Again, these two words, associated, rather indentified with the particular contours of the caste mark worn by the two sections of Vaishnavites on their foreheads, leave one guessing, in vain, their etymological bearing or kinship. To the mere strickler in words, this might sound strange, if not preposterous, and yet, through sheer usage, it has become too fundamental to be questioned. Leaving it aside, for the present, it would indeed be profitable to examine what exactly 'Thennacharya Sampradaym' connotes and who, in this context, are known as 'Thennacharyas'. Sri P. B. A. Swami, more knowledgeable and painstaking than whom none is available in our midst, has thrown adequate light on this, from time to time, and has once more focussed the attention of his numerous readers on this, in the 97th discourse of his "Upanyasa Satadvayam", reinforced, in greater depth, in "Vaidhika Manohara-163" just published.

The expression 'Thennacharya' is not to be confounded as referring to any of the current - day Vaishnavites or the 'Thenkalais'. As a matter of fact, it refers mainly to the 'Poorvacharyas' - the ancient preceptors such

as Nathamunigal, Alavandar and other Srivaishnava Acharyas. While approaching the Ashram of sage Agastya, Sri Rama spoke to Lakshman, as follows:—

"Dakshina dikkrita yena saranya punyakarmana". (தக்ஷிணா திக் க்ருதா யேந சரண்யா புண்யகர்மணா). Again, in 'Perumal Thirumozhi' Sri Kulasekhara Azhvar has reverently alluded to Agastya, the great progenitor of the Tamil language as 'Vandamizh Mamuni" while Vedanta Desika has said in glowing terms in his Dramidopanishad Tatparya Ratnavali', that the Tamil language which beamed forth from Agastya came to be acquired and handled by the Great Saints. All the Sri Vaishnava Acharyas, who drank deep of the nectarine hymns of the Azhvars would thus be eligible to be dignified as 'Thennacharyas', as contra'- distinguished from the Smarthas and Madhvas, who were not conversant with the Divya Prabandhams. So then, there need be no doubt lingering in anybody's mind whether Sri Vedanta Desika, who shone in the Vaishnavite firmament 600 years ago, in all splendour, came under a different section or group outside the ken and compass of the glorious galaxy of the 'Thennacharyars'.

*That Sri Vedanta Desika was as much a 'Thennacharya' as any other contemporaneous Vaishnava Acharya is amply borne out by the fact that apart from his own extra-ordinary devotion to the Divya Prabandham, he has been enshrined and worshipped in the temples, at several pilgrim centres having the Thennacharyas as their age-long votaries. The pundram (caste-mark) worn on the relative idol in all such temples including the one in the temple at his birthplace is the same as the one worn by the 'Thennacharyas' (viz) 'Thenkalai'.*

Unbridled malignance, on the part of a few, here and there, manifesting in vandalistic designs on the temple at the birthplace of Sri Desika, at Srirangam and elsewhere, aimed at changing the caste-mark on Desika's idol as well as the temple walls, was sternly dealt with under the law, as it should be. The suppressed desires and unrealised ambitions, goaded on by the injured pride of the misadventurers, however, led to their setting up during the last 100 years and even less separate shrines for Vedanta Desika with 'Vadakalai' caste-mark in private dwellings, estates etc., outside the precincts of the ancient temples, where, in the eyes of the law, such an act would be sacrilege.

It may be mentioned, in this connection, that Thirukachi Nambigal, even though of Non-Brahmin origin, is worshipped in Sri Vaishwavite temples on a par with other Poorva Acharyas. Some of his shrines are also in the management and full control of Saivites who trace their origin to Thirukachi Nambigal. But they have not taken it into their heads to convert the idols of

Thirukachi Nambigal according to their own creed, with Vibuthi (holyash), etc. smeared on the forehead, but have seen to his worship according to his Vaishnavite creed itself. How noble would it be if the Vadakalais emulate the same example in the case of Sri Vedanta Desika also.

That (1) Sri Vedanta Desika lived in great amity with the contemporaneous Acharyas and made the fullest use of the knowledge imparted through the works of the seniors, like Nanjeeyar, Periavacchanpillai etc., (2) the tenets being studiously singled out by a section of the Vaishnavites as stamping out their separate identity, were not actually subscribed to by Vedanta Desika and (3) the only authentic life-history of Vedanta Desika is the 'Acharya-Champu', all others being garbled versions, spurious interpolations etc., maliciously engineered by a few innovators, have been succinctly brought out by Sri P. B. A. Swami in his numerous works during the last forty, odd years. He would still not be tired of presenting these facts over and over again until the desired objective, viz., reconsolidation of the rank and file of Vaishnavites under the common aegis of 'Sri Ramanuja Darsanam', is achieved. Those who might be in a vein to dub this as an utopian dream will do well to realise that all that is needed is the dawn of the requisite measure of intellectual honesty which would help tear off all ill-conceived notions and prejudices and see things in their proper perspective, with the aid of the many solvents dispensed by P. B. A. Swamy, unremittingly. This, however, seems to be a far cry judging from the trend of events during the last hundred years and the feverish activities now apace, in connection with the celebration of the ensuing 701st birth anniversary of Sri Vedanta Desikar, with an unmistakable tinge of fanaticism.

It may be mentioned, in this context for the benefit of those who point the accusing finger at the 'Thenkalais' for not reciting in their temples the 'Desika Prabandhas' and cry down their devotion to Desikar, that there is hardly any point in it. *Ab initio* there is nothing like 'Desika Prabandhas', as Sri Desikar did not bring out a separate prabandham, as such. In his esoteric works such as 'Sampradaya Parisuddhi', there are slokas as well as Tamil songs at the beginning, the middle and the end. These songs forming an integral part of the respective works do not and cannot constitute separate prabandhas. Curiously, however, these songs have been culled out and styled collectively as 'Desika Prabandhas' and individually as 'Amritaaswadini', 'Amritaranjani' and so on, in recent times, on a piece with several other innovations. What is worse, certain pieces such as 'Adaikkalappathu' composed by others have also been palmed off as 'Desika Prabandhas' and smuggled in. Even

otherwise, it has to be noted that the 'Thenkalais' do not recite, in their temples, all the compositions of the 'Poorvacharyas', for example, 'Gnana Saram' and 'Prameya Saram' composed by Arulala Perumal Emberumanar and the 'Ashta Prabandhas' of Divya Kavi Pillai Perumal ayyangar.

Gwalior,
20th July, '68.

(S. SATYAMURTHI AYYANGAR.)



---



## மேலேகண்ட ஆங்கில வியாஸத்திற்கு மூலமான தமிழ்க்கட்டுரை.

ஸாம்ப்ரதாயிக வ்யவஹாரங்களில் "தென்னாசார்யர்கள்" என்றும் "தென்னாசார்ய ஸம்பிரதாயம்" என்றும் வ்யவஹரிக்கப்பட்டு வருவதைக் காணா நின்றோம். இதற்கு எதிராக வடவாசார்யர்களென்கிற வ்யவஹாரமிருந்து வருகிறதாவென்று பார்த்தால் அப்படியொரு வ்யவஹாரமிருப்பதாக எங்கும் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை, தென்கலை, வடகலை என்கிற ப்ரயோகம் மட்டும் தொன்று தொட்டு வந்திருக்கிறது. கம்பராமாயணத்தின் ஆரம்பப் பகுதியில் "வடகலை தென்கலை வடுகு கன்னடம்" என்கிற செய்யுளிருப்பது ப்ரஸித்தம். ஆனால் இது பாஷையைப் பற்றினது. ஸம்ஸ்க்ருதம் தமிழ் தெலுங்கு கன்னடம் என்கிற பாஷைகளையே அங்குக் கம்பர் விவக்ஷித்திருக்கிறாரென்பது அவ்விடத்திலேயே இரண்டாமடியினால் ஸ்பஷ்டம். வடகலையான ஸம்ஸ்க்ருதத்தை விசேஷித்து ஆதரிப்பவர்கள் வடகலையார்; தென்கலையான தமிழை விசேஷித்து ஆதரிப்பவர்கள் தென்கலையார் என்று கொண்டு இந்த வ்யவஹாரம் நிகழ்வதாயிற்று. ஆனால் இஃது என்றைக்கு நிகழத் தொடங்கிற்று? இந்த வ்யவஹாரத்திற்கு ப்ரதம ப்ரவர்த்தகர் யார்? என்று கேட்டால் விடை கூறமுடியாது. இது முன்னோர்களின் நூல்களில் ஏறியிருப்பதுமன்று. நீதி மன்றத்துக் காகிதங்களில் நிறைய ஏறியிருக்கின்றதென்பது தெரிந்ததே. வடகலை தென்கலை யென்கிற இந்த சொற்களுக்கும் புண்ட்ரத்திற்கும் யாதொரு ஸம்பந்தமுமில்லாதிருக்கவும், ஒருவகை யாகாரமுள்ள திருமண் காப்புக்குத் தென்கலை நாமமென்றும், மற்றொருவகை யாகாரத்திற்கு வடகலை நாமமென்றும் வ்யபதேசம் உண்டாயிருப்பது இனி மாறப்போகிறதில்லை. தென்னாசார்ய ஸம்பிரதாயம் என்கிற வ்யபதேசம் மட்டும் சிறிது ஆழ்ந்து ஆராயத் தக்கது. வடவாசார்யர் என்கிற ப்ரதிநிர்தேசம் அடியோடில்லாமல் தென்னாசார்யரென்கிற வ்யபதேசம் மட்டுமே நிகழ்ந்து வருதலால் இந்த வ்யபதேசத்திற்கு இலக்கானவர்கள் யாவர்? என்று ஆராயவேண்டுவது அவசியமாகிறது.



விவாதப் பேச்சுக்களில் தலையிடாத பரமஸாத்விகர்களான பெரியார்களும் 'தென்னாசார்யர்கள், தென்னாசார்ய ஸம்பிரதாயம்' என்கிற வ்யபதேசங்களை வழங்கி வருதலால் இதற்கு இலக்கானவர்கள் யாவர்? என்று பிராமாணிகமாக விமர்சித்து முடிக்கவேணும். இந்த வ்யபதேசமானது தென்கலையார் என்கிற வ்யபதேசம்

போலே இக்காலத்தவர்களை நோக்கியதன்று. பூருவாசாரியர்களையே நோக்கிய தென்பதில் ஐயமில்லை. ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் முதலான ஸ்ரீவைஷ்ண வாசாரியர்களனைவரும் தென்னுசாரியர்களெனப்படுவர். சக்ரவர்த்தி திருமகனுர் அகஸ்த்யாச்ரமத்தருகேயெழுந்தருளும்போது இளையபெருமாளை நோக்கி "தக்ஷிணு திக் க்ருதா யேந சரண்யா புண்யகர்மணு" என்று அகஸ்திய முனிவர் பெருமையைக் கூறுகின்ருர். குலசேகராழ்வார் பெருமாள் திருமொழியில் அகஸ்திய முனிவரை "வண்டமிழ்மாமுனி" என்றே வ்யபதேசிக்கிருர். தேசிகனும் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்னவளியில் "ஸூக அகஸ்த்ய ப்ரஸூதா த்விதி பரிஜக்ர்ஹே" என்றும், பாதுகாஸஹஸ்ரத்தில் "கும்பீஸம்பநோஸ்ர கபலக்ராஸிநஸ் ஸ்வைர பாஷா" என்றும் பெருமதிப்புத் தோற்றப் பேசியுள்ளார். ஆக, ஆழ்வார்களின் ஸம்ப்ரதாயத்தில் ஊற்றமுள்ள ஸ்ரீவைஷ்ணவாசாரியர்களனைவரும் தென்னுசார்யர்களென்கிற வ்யபதேசத்திற்குப் பாத்திரமாயினர். இதற்கு ப்ரதிகோடிகளாகச் சொல்லத் தக்கவர்கள் திவ்யஸூரி - திவ்யப்பிரபந்த - திவ்யதேசங்களில் அவகாஹனமும் மதிப்பு மற்றவர்களான ஸ்மார்த்த மாத்வாதிகளே யாவர். அவர்களைத் தவிர்த்த ஸ்ரீவைஷ்ணவாசாரியர்களுக்கெல்லாம் தென்னுசார்யர்களென்கிற வ்யபதேசம் நிர்விசேஷமாகவுள்ளது. வேதாந்த தேசிகனுட்பட ஸகலாசாரியர்களுக்கும் இந்த வ்யபதேசம் ஸமமான தென்பது தத்துவமுணர்ந்த பெரியார்களுக்கு உடன்பாடு. ... ... ... ... ...

வேதாந்த தேசிகனும் தென்னுசார்ய வகுப்பில் அந்வயித்தவரேயொழிய அவர்க்கென்று தனியேயொரு வகுப்பிருந்ததாக நினைப்பது நியாயத்திற்குச் சேராது. தென்னுசார்யர்களாலேயே தொன்று தொட்டுப் பரிபாலிக்கப்பட்டு வருகிற திவ்யதேசங்கள் பலவற்றில் அவருடைய திவ்யமங்கள விக்ரஹம் ப்ரதிஷ்டை பெற்றும் உத்ஸவாதிகளைப் பெற்றும் வருவது அபலபிக்க முடியாதது. திவ்யதேசங்களில் ஸன்னிதிக்கு வெளிப்பட்ட விடங்களில் அவர்க்கு ஆலய நிர்மாண-மஹோத்ஸவோபலாலனுதிகள் ஆரம்பமாகி எத்தனை ஸம்வத்ஸரமாகியிருக்குமென்று வினவினல் ஆர்ஜவத்துடன் விடை கூறவல்லார் எவ்விதமாக விடை கூறுவரென்ருல் நிகழும் நூற்ருண்டில் தானென்பர்; சென்ற நூற்ருண்டிலேயே ஆரம்பமாயிற்று என்றும் சொல்லுவர். உடனே எதற்காக இந்த விச்வாமித்ர ஸ்ருஷ்டிகள்? என்று வினவினல் த்ருப்திகரமான விடை வருமா? என்று பார்க்கவேணும். அறுநூற்ருண்டுகட்கு முன்பு அவதரித்திருந்த ஆசிரியர்க்கு அந்நாள் தொடங்கி ஒருவிதமான வழிபாடு நடந்துவாரா நிற்க, பிற்பட்ட காலத்தில் (அதாவது மிகவும் ஸந்நிஹிதமான காலத்தில்) திடீரென்று ஒரு கோலாஹலத்தைக் கிளப்பி அஸ்தாநே மாச்சரியத்தை வளரச் செய்யும் செயல்களை நடத்திக் கொண்டு போருவதானது எம்பெருமானுடைய லீலைகளிலே இதுவுமொன்று என்று நினைப்பதற் குறுப்பா மத்தனை, யொழிய வேறு பேசத்தானுவதுண்டோ?

காஞ்சீபுரியில் திருக்கச்சி நம்பிகள் ஸன்னிதியுள்ளது. அதைப் பரிபாலிக்கும் பொறுப்பை பஸ்மதாரிகளான சைவர்கள் பரம்பரையாக ஏற்று வருகிருர்கள். அவர்கள் திருக்கச்சி நம்பிகளின் ஸம்பிரதாயம் வேருயிருக்கின்ற தென்பதை யுண

ராதவர்களல்லர். அந்த ஸம்பிரதாயத்தை மாற்றித் தங்களைப்போல் அவரையும் (அர்ச்சையில்) பஸ்மதாரியாக ஆக்கிவிட வேணுமென்று நினைப்பதாகவோ அதற்குரிய சேஷ்டைகள் செய்வதாகவோ இதுவரையில் தெரியவில்லை. காஞ்சியில் மட்டுமன்று; மற்றும் அநேக ஸ்தலங்களிலும் திருக்கச்சி நம்பிகள் பக்கலிலே பரிவு காட்டுபவர்களும் அவர்க்குத் தொண்டுசெய்பவர்களும் சைவர்களாகத்தான் காணப்படுகிறார்கள். அவர்கள் நம்பியின் சின்னங்களை மாறுபடுத்த முயலுவதில்லை. தங்களுடைய சின்னங்களை யிட்டு அவரைத் தனியே பிரதிஷ்டை செய்து தாங்கள் தனியாக ஆராதிக்கவும் ஆசைப்படுவதில்லை. ஸகலவித யோக்யதா ஸம்பந்நரான தேசிகனிடத்தில் ஜந்மாந்தர ஸஹஸ்ர நற்றவப் பயனாக ஒரு வகுப்பினர்க்கு பக்தி விளைந்தது உஜ்ஜீவந ஹேதுவே யென்பதில் ஐயமில்லை. அவ்வாசார்ய ஸார்வபௌமனுடைய வழிபாடுகள் தொன்றுதொட்டு எந்தவிதமாக நிகழ்ந்து வருகின்றதென்பதைப் பிராமாணிகர்கள் அபலாபம் செய்ய முடியுமா?

முதன் முதலாகத் திருவரங்கம் பெரிய கோயிலில் தேசிக விக்ரஹத்தில் திருமண் விபர்யயம் செய்யவேணுமென்று ஒரு வகுப்பினர்க்குத் தோன்றிற்று. அப்படியே செய்தார்கள். செய்த க்ஷணத்திலேயே ஹாஹாகாரம் ஏற்பட்டது. அந்த விஷமச்செயல் அநீதியானதென்று முடிவு செய்த அரசாங்கப் பிரபுக்கள் அதற்காக ஆயிரம் ரூபாயபராதம் விதித்தார்கள். அது மூன்று நீதிமன்றங்களிலும் ஊர்ஜிதமாயிற்று. உலகத்தில் எத்தனையோ விஷமச் செயல்களுக்கு எத்தனையோ விதமான சிக்ஷைகள் ஏற்படுவதுண்டு. ஆயிரம் ரூபாயபராதம் விதிக்கப்பட்டதாகக்காணும் ஸம்பவம் இஃதொன்றுதான். இதனால் தேசிகனுடைய சின்னத்தை மாற்ற முயல்வது மிகப் பெரியவும் தவறு என்பது கையிலங்கு நெல்லிக்கனியாக விளங்கவில்லையா? திருவவதார ஸ்தலத்து ப்ரக்ரியைகளும் ப்ரஸித்தமானவையே. பெரிய தொரு வகுப்பில் விவேகி ச்ரேஷ்டர்கள் இல்லையென்று சொல்ல முடியுமா? நெஞ்சாலாவது நினைக்கமுடியுமா? ஆனால் அவர்களின் விவேகம் பயன்படவில்லை.

நெடுநாளாக நாம் வஸ்து ஸ்திதியைப் பலபல விஷயங்களில் எடுத்துக் காட்டுவதுபோல இவ் விஷயத்திலும் மனச்சாக்ஷியை மீறாமல் எடுத்துக் காட்டின தொழிய வேறில்லை. இதற்காக நம்மைச் சிலர் வெறுப்பது யுக்தமாகுமா? இது ப்ராமாணிகமா? அப்ராமாணிகமாக ஆக்ரஹத்தோடு தெரிவிக்கப்படுகிறதா? என்பதையன்றோ ப்ராமாணிக ப்ராஜ்ஞர்கள் பரிசீலிக்க வேணும். நெஞ்சை நடு நிலையில் வைத்து யுக்தா யுக்தங்களை விவேகிக்க வேண்டாவா? வேதத்தின் பதிபாட விருத்தமாக வேதபாஷ்யங்கள் தோன்றியுள்ளன வென்று விரிவான விமர்சங்கள் வெளியிட்டேன். ஸ்மார்த்த வைதிக வித்வான்களும் இதை உகக்கிறார்களேயொழிய ஒருவரும் க்ஷேபிக்கவில்லை. உண்மைக்குமாறான விஷயங்களை நாம் ஒருபோதும் எழுதமாட்டோம்; நெஞ்சாலும் நினைக்கமாட்டோம். திருப்புட்குழி ஸ்வாமி யென்று போற்றப்படும் மஹான் போல்வார் "அபிநிவேச வசீக்ருத சேதஸாம் பஹுவிதாமபி ஸம்பவதி ப்ரம:" என்கிற ஆளவந்தார் ஸ்ரீஸூக்திக்கேயன்றோ இலக்காகிக் காலங்கழித்தனர். ... *

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானர் ஜீயர் திருவடிகளே சரணம்.

# நற்பொருளெழுநூறில் ஆறுவது நூறு

## ஸ்ரீஉவே. D. R. ஸ்வாமிக்கு விண்ணப்பம்

501. அடியேனல் ஹ்ருதயபூர்வகமாக அளிக்கப்பட்ட ஸஹ்ருதயாஸிகமணி யென்னும் விருதினுல் விபூஷிதரான ஸ்ரீமதுபயவே. திண்டுக்கல் ராமஸ்வாமி ஐயங்கார் B.A., B.L., ADVOCATE VEPERY ஸ்வாமிந், ஸ்வரூபாநுரூபமாகத் தெண்டனிட்டு விஜ்ஞாபிக்கிறேனிதை. இதுகாறும் தேவரீருக்குப் பல விண்ணப்பங்கள் போஸ்ட் மூலம்அனுப்பியிருக்கிறேன்,தேவரீரிடமிருந்து பதில் ஸ்ரீமுகங்களும்பெற்றிருக்கிறேன் பதில் பெருத விண்ணப்பங்களுமுண்டு. தேவரீருடைய பல பல ஸ்ரீமுகங்கள் ஸந்தோஷமும் ஸௌஹார்தமும் வடிவு கொண்டிருக்கும்; சில ஸ்ரீ முகங்கள் ஸங்கடமும் நிக்ரஹமும் நிறைந்திருக்கும். இவ்விரண்டு வகைக்கும் காரணம் அடியேனுடைய விண்ணப்பங்களும் கட்டுரைகளுமே யென்பதையறிவேன். தேவரீருடைய அந்தரங்கத்தில் அடியேன்பால் கருணையே மிக்கிருக்கின்றதென்பதை அடியேன் மட்டுமன்றிக்கே உலகமெல்லாம் அறிந்துள்ளது. அக்கருணை எஞ்ஞான்றும் நிலவ வேணுமென்பது அடியேனுடைய நித்யப்ரார்த்தனை.

502. இப்போது சிலவிஷயங்களை தேவரீருக்கு விண்ணப்பம் செய்ய எம்பெருமானது நியமனம் பெற்றேன். இவ்விண்ணப்பம் உலகமறிந்ததாயிருக்கட்டுமென்று தோன்றின படியால் அச்சிட்டு அனுப்புகிறேன். இதில் சொற்பொருட் குற்றங்களிருந்தால் க்ஷமித்தருள வேணுமென்று பிரார்த்திக்கின்றேனல்லேன்; தேவரீர் அவற்றை உலகறிய வெளியிட்டு அடியேனைத் திருத்திப் பணி கொள்ள வேணுமென்று விநயத்துடன் வேண்டுகிறேன். நானெழுதிய நூல்களில் இதுவும் ஒரு நூலாக நிலவுமென்றெண்ணுகிறேன். அடியேனுடைய நூல்கள் பதின்மூன்று துறைகளில் அமைந்து வருகின்றன வென்றும், அவற்றுள் ஒரு துறை பரபக்ஷப்ரதிக்ஷேபபர மென்றும் நாற்றிசையுமறிய வெளியிட்டிருக்கிறேன். இதை அந்தத் துறையில் கொள்ளாமல் லோகாபிராமத் துறையில் உலகம் கொள்ள வேணுமென்று ஆசைப்படுகிறேன். உண்மையில் லோகாபிராமமான நூலே இது.

503. அடியேனுடைய ஸம்ஸ்க்ருதநூல்கள் பெரும்பாலும் வடஇந்தியாவில் பரவுகின்றன; தெலுங்கு நூல்கள் ஆந்திர மாகாணத்தில் பரவுகின்றன. தமிழ் நூல்கள் தென்னுட்டில் மட்டுமன்றிக்கே எந்நாட்டிலும் பரவி வருகின்றன- நம் நாட்டினர் எங்கும் பரந்திருப்பதனுல். இத் தமிழ் நூல்களில் அத்யந்தம் லோகோபகாரகங்களான வியாக்யானுதி க்ரந்தங்கள் பலவற்றினிடையில் பரபக்ஷப்ரதிக்ஷேபநூல்கள் ஸமய விசேஷங்களில் தோன்றி இவையே மேம்பட்டுக் காணப்படுகின்றன. உண்மையில் அடியேனுடைய மறுப்பு நூல்களுக்குக் காரணபூதர்கள் பலர் எனினும், அவர்களுள் தேவரீர் முதல் ஸ்தானம் வஹிப்பதாக அடியேனுடைய அபிப்

பிராயமென்பதை அபலாபமின்றிக்கே விஜ்ஞாபிக்கிறேன், இதை அந்யாபதேசத்தாலே பல கட்டுரைகளில் விஜ்ஞாபித்திருந்தாலும் இப்போது நேரிடையாகவே விஜ்ஞாபிக்கிறேன். எதற்காக வென்னில், உபரிஷ்டாத் அவதேயம்.

504. ஸ்வாமி ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் அபராத பரிஹாராதிகாரமென்று ஓர் அதிகாரம் பதினெட்டாவதாக அமைத்திருக்கிறார். அதன் முடிவில் இட்டிருப்பதொரு காரிகை; — *அநுதாபாத் உபரமாத் ப்ராயச்சித்தோந் முகத்வதঃ. தத் பூரணாச்ச அபராதாஸ் ஸர்வே நச்யந்தி பாதசঃ.* என்பதாகவுள்ளது. இதன் பொருள் என்ன வென்றால்; செய்த குற்றங்களுக்கு நான்கு முகத்தாலே பரிஹாரம் ப்ராப்தம் . .ஐயோ! அபசாரப்பட்டோமே! என்று அநுதபித்தல், 2. * க்வா கார்யம் சசலக்ஷ்மணঃ க்வ நு குலம்?. பூயோபி த்ருச்யேத ஸா* இத்யாதிச்லோக ப்ரக்ரியையிலன்றிக்கே அநுதாபம் ஸபலமாம்படி ஏற்கெனவே செய்த குற்றத்தை மேன்மேலும் செய்யாதொழிகை. 3, செய்த குற்றம் ஸாமான்ய மன்றிக்கே, ப்ரபலமாயிருந்தால் அதுகழிய பிராயச்சித்த மென்ன வென்று பெரியார்களை யடி பணிந்து விசாரித்தல். 4. கேட்டு விட்டு வாளாவிருந்தொழியாதே அவர்கள் தெரிவிக்கும் ப்ராயச்சித்தத்தைப் பத்தும் பத்தாக அனுஷ்டித்து நிறைவேற்றுதல். ஆக இந்நான்கு வகைகளாலே நான்குபாகமாகக் குற்றங்கள் கழிந்திடுமென்பதே மேலே குறித்த தேசிக காரிகையின் பொருள்.

505. இதற்கு மேல் அபராத விவரணம் செய்ய வேண்டியது அவசியமாகிறது. அவரவர்கள் தங்களை நிரபராதர்களாகவே நினைப்பது வழக்கம். அபராதத்தை யெடுத்துக் காட்டினாலும் ' இஃது உள்ளதை யுரைத்தபடியேயல்லது அபராதமோ?' என்று கண்ணழிப்பாருளர். தேவரீரை ப்ராமாணிகராகக் கருதி மேலே விஜ்ஞாபிக்கிறேன்.

506. (28 – 9—1944.) தாரண ஹு புரட்டாசித் திருவோணத்திலிருந்து தேவரீருடைய அபராதங்கள் அநுவர்த்தித்து வருகின்றன. உலகம் வாழ ஆசார்ய ஸார்வ பௌமருடைய திவ்ய சரித்திரத்தை யெழுதி வெளியிட வேண்டியது அவசிய மென்பதை யாரும் மறுக்கமாட்டார். தேவரீர் ஸ்ரீ தேசிக வைபவம் என்று பெயரிட்டு, உலகம் போற்ற நின்ற மஹாசார்யர்களைத் தூஷிப்பதுதான் தேசிக வைபவ ப்ரபஞ்சன மென்று கருதிச் சில விடங்களில் அவ்வுத்தமாசாரியர்களின் திருநாமத்தை ஸ்பஷ்டமாகக் கூறியும், சில விடங்களில் மறை முகமாகவெழுதியும் அபசாரப்பட்டிருப்பது அஸஹ்யாபசாரங்களில் பரிகணிக்கத் தக்கதாகவுள்ளது. இந்த விண்ணப்பத்தை விரிவுக்கு அஞ்சாமல் உலகுக்கெல்லாம் வெட்ட வெளிச்சமாகச் செய்ய வேண்டியதென்று சங்கற்பித்துக் கொண்டு எழுதத் தொடங்கினபடியால் அனைவர்க்கும் விஷயங்கள் புரியும்படி விஜ்ஞாபிக்கிறேன்.

507. தேவரீர் எழுதினதாக மேலே குறித்த ஸ்ரீ தேசிகவைபவம் 1944 ஆம் ஆண்டுக்கு முன்னமும் வெளிவந்துள்ளதோ என்பதை யறியேன். பின்பு மறுபதிப்புகளும் ஏறிப் பிரசுரமாகி வருவதாக அறிந்துள்ளேன், அதில் பக்கம் 6 ல் — "ஸ்வாமி தேசிகனுடைய வாழ்க்கையின் நிகழ்ச்சிகள் சரித்திர ஆராய்ச்சி முறைமையில் தக்க ஆதாரங்களுடன் நமக்குக் கிடைத்தில." என்று பிராமாணிகமாக எழுதி

விட்டு, நிராதாரமாகச் சில மஹாசார்யர்களை வலுவில் பிடித்திழுத்து "விரலுக்குத் தகாத வீக்கம்" என்னும் படியான முறையில் நிந்தித்திருக்கிறீர். அதில் பக்கம் 10 ல் "அஸூயுக்களால் வந்த இன்னல்கள்" என்று தலைவரியிட்டு, அநுவதித்தாலும் நமக்கும் பாபம் கூடு பூரிக்கும்படியான விஷயங்களை யெழுதியிருக்கிறீர்.

508. அவ்விடத்தில் "ஸ்வாமியிடம் பொறுமை கொண்டவருள் ஒருவரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் இவருடன் போட்டி யிட்டதன் பலனாக ஸ்வாமியிடமிருந்து ஸ்ரீபாதுகாஸஹஸ்ரம் என்ற க்ரந்தம் தோன்றியது" என்றெழுதியுள்ளீர். அதற்கு மேலே மூன்று வரிகள் பாதுகாஸஹஸ்ரத்தின் பெருமையை எழுதியுள்ளீர். மூன்று வரியென்ன? முப்பது, முந்நூறு, மூவாயிரம் வரிகள் அல்லது பக்கங்கள் எழுதினாலும் போதாது. 'ஏற்கும் பெரும்புகழ்' என்னத்தகும். ஆனால் தேவரீருக்கு பூர்வாசார்ய நிந்தையிலிருக்கும் உத்ஸாஹம் தேசிகவைபவ தத்ஸூக்திவைபவ ப்ரபஞ்சனத்தில் இல்லாமையாலும் அந்தவைபவங்களை விளக்குமாற்றல் சிறிது மில்லாமையாலும் அகாண்டே ஆசார்ய நிந்தையில் அஸஹ்யமாகக் கை வைத்தீர். அழகிய மணவாளப் பெருமாள்நாயனாரென்னுமாசிரியர் யார் தெரியுமோ? வடக்குத்திருவீதிப்பிள்ளையின் திருக்குமாரரும், பிள்ளை லோகாசாரியர் திருத்தம்பியாரும், ஆசார்யஹ்ருதயாதிக்ரந்த காரருமாவர்.

509. R. D. ஸ்வாமிந் ! உமது ஆசார்ய குடும்பஸ்தரான சாமா திருமலைதாதாசாரியார் பாதுகாஸஹஸ்ரபூமிகையாகஎழுதி வெளியிட்டிருப்பதைப் பலகால் எடுத்துக் காட்டியிருக்கிறேன். இப்போதும் காட்டுகிறேன். வாதிகேஸரி யென்பவர் தாம் பெற்றிருந்த விருதின் செருக்கினால் தேசிகனோடு சண்டைக்கு வந்ததாக அவரும் மற்றொருவரும் எழுதியுள்ளார். நீர் அவரைவிட்டு விட்டீர். உண்மை கேளும்.

510. தேசிகன் நம்பெருமாள் ஸன்னிதிக்கு எழுந்தருளினகாலத்தில் பிள்ளை லோகாசாரியர், அவருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப்பெருமாள் நாயனார், ச்ருதப்ரகாசிகாபட்டர் முதலானோர் நம்பெருமாளை யெழுந்தருளப்பண்ணிக் கொண்டு [ அபீதிஸ்தவத்தில் ஸ்வாமி ப்ரஸ்தாவித்திருக்கிற] மஹாவிபத்தில் சிக்கிக்கொண்டு வெளியேறியிருந்தார்கள். அவர்கள் ஜீவிதத்தோடே திருவரங்கம் வந்து சேர்ந்தார்களல்லர். ஆகவே பிள்ளை லோகாசார்யரையோ அவர் திருத்தம்பியாரான அழகிய மணவாளப்பெருமாள் நாயனாரையோ தேசிகன் ஸந்தித்தவரேயல்லர். அவ்வாசிரியர்களின் திருவடி நிழலிலே யொதுங்கி வாழவேணுமென்கிற விருப்பத்தோடே திருவரங்கம் சென்றிருந்தும் அந்த பாக்யம் ஸ்வாமிக்கு வாய்க்கவேயில்லை. அந்தக்குறையை அபீதிஸ்தவத்திலே நன்கு காட்டியேயுள்ளார் மேற்றிசை சென்ற தேசிகன். "நிரஸ்த ரிபுஸம்பவே க்வசந ரங்கமுக்யே விபோ! பரஸ்பர ஹிதைஷிணாம் பரிஸரேஷு மாம் வர்த்தய" என்பதனால்.

511. ஸ்ரீரங்கஸ்ரீ நிருபத்ரவமானபிறகு மேற்றிசையில் நின்றும் தேசிகன் கோயில் வந்து சேர்ந்து, ஏற்கெனவே அங்கு ஆசார்யகம் பண்ணின ஆசார்யர்களின் திருவடிஸம்பந்தம் பெற்றவர்களின் அபிமானத்திலே யொதுங்கியே வாழ்ந்து வந்தாரென்பது *ரங்கஃஸ்தானே ரஸிகமஹிதே ரஞ்ஜிதாசேஷசித்தே வித்வத்ஸேவா

விமல மநஸா வேங்கடேசேந* என்பதனுல் ஸ்வாமிதம்மாலேயே பொறித்து வைக்கப்பட்டது. தம் மனம் முன்பு மலீமஸமாயிருந்ததென்றும், ரங்காஸ்தானம் சேர்ந்து ரஸிகவித்வத் ஸேவாபாக்யம் பெற்ற பின்பே வைமல்யமடைந்ததென்றும் ஸந்தேஹ விபர்யயமற அருளிச்செய்திருக்க, அவ்வாசார்யர்களோடு சண்டையிட்டாரென்று ஒருவர் மாறி ஒருவராக எழுதிக்கொண்டே காலங்கழிப்பது உங்களுக்கு ஒரு போதுபோக்கா யிருக்கின்றதந்தோ! ஏதேனுமொரு மூலையில் ஒருவரிருவராவது வஞ்சிக்கப்படட்டுமேயென்பது ஒன்றேயாயிற்று உங்களுடைய ஆசாமோதகம். இந்த நப்பாசையோ தப்பாசையோ நம்முடைய வாழ்நாளிலும், பிறகு ஒரு நூற்றுண்டுவரையிலும் உங்களுக்கு நிறைவேறுதென்பது திண்ணமாக எண்ணத்தக்கது. என்ன? இதைத் திண்ணமாகத் தெரிந்துகொண்டீரா?

*512.* முக்கியமாக, மிக முக்கியமாக நீர் விடையிறுத்தாகவேண்டிய விஷயமொன்றை நான் பலகால் வெளியிட்டிருக்கிறேன்; இப்போதும் வெளியிடுகிறேன்.

*513.* ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் ஸ்ரீபாஷ்யகாரர்க்கு முன்பு இருந்த ஆசாரியர்கள் ஸ்ரீ மந்நாதமுனிகளும் உய்யக்கொண்டாரும் மணக்கால் நம்பியும் ஆளவந்தாரும், ஆளவந்தாருடைய திருவடிகளாய் எம்பெருமானுர்க்கு ஆசாரியர்களான ஐவரும், திருக்கச்சி நம்பிகளும் ஆகப் பதின்மரேயாவர். எம்பெருமானுர்க்குப் பிற்பட்ட ஆசாரியர்கள் அபரிமிதர்களாகவுள்ளார்கள். அவர்களைப்பற்றி தேசிகன் தமது குரு பரம்பராஸாரத்தில் "எம்பெருமானுர் ஸ்ரீ பாதத்திலாச்ரயித்த முதலிகளைத் தந்தாம் ஸம்ப்ரதாயப்படிகளிலே யறிந்துகொள்வது" என்று ஒரே வரியில் முடித்தருளினுர். க்ரந்தங்களை யருளிச்செய்து உபகாரகர்களான ஆசாரியர்களை யாவரும் தெரிந்து கொண்டிருக்கிறோம். அவ்வாசாரியர்களிடத்தில் ஸ்ரீ வைஷ்ணவ குலத்திற் பிறந்த யாவரும் விப்ரதிபத்திலேசமுமின்றிக்கே ஸம்ப்ரதிபத்தி கொண்டிருக்க ப்ராப்தம். தென்கலை வகுப்பினர் ஸ்ரீமந் நிகமாந்த மஹாகுரு—தத்புத்ரரத்ந பர்யந்தர்களான ஆசார்யர்களில் எந்த ஆசாரியரிடத்திலும் ஈஷத்தும் விப்ரதிபத்தி கொண்டிருக்கவில்லை. பூர்வாசார்ய பரம்பரையில் அவஸானஸ்தானத்தில் நிற்பவர் மணவாளமாமுனிகள். அவர் தாம் செய்தருளின வியாக்கியான நூல்களிலே கூரத்தாழ்வான் பட்டர் நஞ்சீயர் முதலான ஆசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளைப்போலவே எங்களாழ்வான், நடாதூரம்மாள், ச்ருதப்ரகாசிகா பட்டர், நிகமாந்த மஹாகுரு ஆகிய இவ்வாசிரியர்களின் ஸ்ரீ ஸூக்திகளையும் பிரமாணமாகக் காட்டியருளுகிறுர். தேசிகனுடைய ரஹஸ்யத்ரய ஸாரத்திலிருந்தும் தத்வமுக்தாகலாபத்திலிருந்தும் ந்யாஸவிம்சதியிலிருந்தும் வாக்யராசிகளையும் சுலோகங்களையும் மாமுனிகள் மேற்கோள் கொடுத்திருப்பது ப்ரஸித்தம். வாதிகேஸரி அழகிய மணவாளச் சீயரும் தம்முடைய தத்வதீபாதிகளில் தேசிகனுடைய பல பல ஸூக்திகளை உதாஹரித்து அர்த்தவிவரணமும் செய்திருக்கிறுர். அந்தச் சீயர்க்கு இருநூறு வருடங்கள் பிற்பட்டவராய் அந்தத் திருநாமமே உடையராய் ஸ்ரீ காஞ்சீ கீழ கோபுர வாசலிலுள்ள மடத்திற்குத் தலைவரான ஸ்வாமி அருளிச்செய்ததாய் பகவத் விஷய ஸ்ரீ கோசங்களில் அச்சிடப்பட்டதாயுமுள்ள "வேதாந்த சாஸ்த்ர த்ரவிடாகமாத்ய தசக த்வந்த் வைககண்டயம்" என்னும் மஹத்தான க்ரந்தத்தில் ஆசார்யவந்தன

மாகச் செய்துள்ள சுலோகங்களில் நான்காவது சுலோகம் "ஸ்ரீவத்ஸ சிஹ்ந தநுஜாகமமௌலி யோகி ஸ்ரீமத்கலிக்ந வரயோகிமுகா மஹாந்தঃ, வ்யாஸார்ய வேதசிகரார்ய மஹார்யமுக்யா வேதாந்த யுக்மகுரவோ ஹ்ருதி ஸந்நிதத்யு;" என்பது. இதில் ஆழ்வான் பட்டர் நஞ்சீயர் நம்பிள்ளை மணவாளமாமுனிகள் ச்ருதப்ரகாசிகா பட்டர் வேதாந்த மஹாகுரு தொட்டயாசார்யர் ஆகிய இவ் வாசிரியர்களைச் சிந்தனை செய்திருக்கிறார். சென்ற நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த வித்வான்களில் நிகரற்ற வித்வானும் வேதாந்த வாதாவளீ ந்யாயபாஸ்கராத்யநேக க்ரந்த ப்ரணேதாவுமான மைஸூர் (மண்டயம்) அனந்தாழ்வான் தம்முடைய க்ரந்தங்களில் தேசிகனுடைய அனேக ஸூக்திகளை ஆங்காங்கு உதாஹரித்திருக்கிறாரென்பதும், நிகழும் நூற்றாண்டிலும் காஞ்சீபுரியில் ஸுப்ரஸித்த வித்வத் ஸார்வபௌமராக விளங்கின குன்றபாக்கம் ஸ்வாமி தாம் பணித்த தத்வரத்னாவளியில் "ஜயதி பகவாந் வேதாந்தார்யஸ் ஸ தார்க்கிக கேஸரீ" என்று பணித்திருக்கிறாரென்பதும் இங்ஙனே மற்றும் பலவும் குறிக்கொள்ளத்தக்கவை

514. இவ்வாறாக தேசிகனுடைய ஸ்ரீஸூக்திகளைக் கையாண்டவர்களும் அவரை உபச்லோகித்தவர்களும் தென்னாசார்ய பரம்பரையிலே தேறுகிறாப்போலே மற்றொரு பரம்பரையில் ஒருவராவது தேறக்கூடுமோ? திருக்குடந்தை கோபாலதேசிகன் என்றொரு மஹநீயர் ஜனித்து அவரிடத்திலே யதிகள் மூவர் ஆச்ரயித்து முநித்ரய ஸம்ப்ரதாயமென்று ஒன்று ஏற்பட்டபிறகு தேசிகனைத் தெரிந்து கொண்டவர்களும் அவரை உபச்லோகிப்பவர்களும் ஏற்பட்டார்களென்பதில் நமக்கு விவாதமில்லை. இதை நான் எனது பரச்சத க்ரந்தங்களில் எழுதியுள்ளேன். இந்த கோபாலதேசிகாதிகளை விட்டிட்டு இவர்களுக்கு முன்னே எதிர்த்தலையில் தேசிகனென்று வாய்திறந்த ஒரு வ்யக்தியாவது உண்டா? உண்டானால் இன்னாரென்று எடுத்துக் காட்டுமின் என்று கூசாமல் பலகால் கூறியிருக்கிறேன்.

515. ஸ்ரீமத். D. R. ஸ்வாமிந்! விஜ்ஞாபிக்க வேண்டிய விஷயங்கள் மிகப் பெரியன இருப்பதாலும், சோபக்ருத் ௵ பங்குனி ௴ (1964 மார்ச்சு ) வெளியிட்ட ஸ்ரீராமாநுஜன் 182, 183ல் "பாதுகாஸஹஸ்ரவிசாரவிளக்கம்" என்னுங்கட்டுரையை 10 பக்கங்களுக்கு மேலாக வெளியிட்டிருக்கிறேனாதலாலும் ப்ரேத சிரஸி லகுட ப்ரஹாரம் போன்ற விதனை இங்கு நிறுத்திக்கொள்ளுகிறேன். இந்த சந்தர்ப்பத்தில் (பக்கம் 10 ல்) நீர் எழுதியிருக்கிறீர்-"முன்பு ஸ்ரீ ரங்கத்தில் ஆசார்யகம் செய்து வந்தவர்களும் அவர்களின் சிஷ்யர்களும் ஸ்வாமி தேசிகன் விஷயத்தில் பல்வகையான இடையூறுகளையும் ஹிம்ஸைகளையும் புரியத் தலைப்பட்டனர்; அவர்களால் ஸ்வாமி அடைந்த கஷ்டங்கள் பல. அவற்றைக் குருபரம்பரைகளில் விளங்கக் காணலாம்" என்று. இங்கே அடியேனுடைய ஸவிநய விஜ்ஞாபனத்தைக் கேளீர்.

516. நீர் எழுதுகிற விஷயங்களுக்குச் சிறந்த ஆதாரமிருப்பதாகவும் அதற்கு குருபரம்பரையென்று பெயராகவும் காட்டிவிட்டீர். குருபரம்பரா ப்ரபாவம் என்று சொல்லத் தெரியாத அவிவேகிகள் குரு பரம்பரையென்று சொல்லுகிற ரீதியிலே நீரும் எழுதி விட்டீர். இது வொரு பெரியவிஷயமன்று. குருபரம்பராப்ரபாவமென்றே உமக்கு விவக்ஷித மென்று கொள்வோம். 'குருபரம்பரையில்' என்னுதே

'குருபரம்பரைகளுள்' என்றமையால் நீர் செய்யும் ஆசார்ய நிந்தைகளுக்கு ஆதார மான சுவடிகள் பல இருப்பதாகத் தெரியவருகின்றது. 'காணலாம்' என்னுதே 'விளங்கக்காணலாம்' என்றபடியாலே அந்தச் சுவடிகளின் பெருமையும் தெரிய வரு கிறது. அந்தச்சுவடிகள் இந்த எழுநூருண்டு விழா வியாஜத்தினுல் பல பாஷை களில் பலலிபிகளில் வெளிவருவது விலக்ஷண லோகோபகாரமல்லவா? முன்னம் தமிழில் வெளிவரட்டும். அதற்காகும் செலவை [அச்சுக்கூலிமுதலானவற்றை] அடி யேனுபயமாக ஏற்றுக்கொள்வதாய்ச் சபதம் செய்கிறேன். குருபரம்பரை கிடையா தென்றும், அச்சிட்டிருப்பவை கல்பிதங்களென்றும் (திவம் கதர்களான) ஸ்ரீமத் தன்றி பட்டப்பாதாதாசாரியார் ஸ்வாமி, சாமா, திருமலைதாதாசாரியார், சேட் லூர் நரஸிம்ஹாசாரியார் என்னுமிவர்கள் கல்வெட்டுச்செய்து அச்சிட்டிருப் பதெல்லாம் அபத்தம் என்றுவது தேறட்டும். இதை இலேசான வார்த்தையாக விட்டுவிடாமல், லோகோபகாரார்த்தமாக நீங்கள் அச்சிட திட்டமிட்டிருக்கும் சுவடிகளில் நீர் பிரமாணமாகக் காட்டும் குருபரம்பரைகள் தலைமை ஸ்தானம் பெறவேண்டு மென்பதை மீண்டும் மீண்டும் ஸவிநயம் ஸாஞ்ஜலி பந்தம் விஜ்ஞா பயே. நீர்செய்கிற ஆசார்யதூஷணங்களெல்லாம் தாந்தோன்றியாகச் செய்வன வல்ல வென்றும். பிரபல மூலாதாரங்கொண்டே செய்யப்படுவன வென்றும் தேறி உமக்குப் பரமப்ராமாணிகத்வத்தை ஸாதித்துக் கொடுக்குமாதலால் இதை நீர் பரம லாபமாகக்கொண்டு முன்னம் மிக முயன்று செய்ய வேண்டும்.

517. ஸ்ரீரங்கத்தில் ஆசார்யகம் செய்துவந்தவர்களும் அவர்களின் சிஷ்யர்களும் ஸ்வாமி தேசிகனுக்குப் பல்வகையான இடையூறுகளையும் ஹிம்ஸைகளையும் புரியத் தலைப்பட்டதற்கு மூன்று காரணங்களெழுதியிருக்கிறீர். 1.அவ்வாசார்ய ஸார்வ பௌமர்கள் கற்காத ஸ்ரீபாஷ்யாதிகளை இவர்கற்றுப் பன்முறை ப்ரவசனம் செய்து விட்டாரென்றும், 2. அவ்வாசார்யவர்யர்கள் கற்ற பிரபந்தங்களிலும் இவர்தெளிந்த ஞானத்துடன் திகழ்ந்தாரென்றும். 3. அந்த ப்ரபந்தங்களிடத்தில் அவர்களைவிட அதிகமான ஆதரத்தை இவர் செலுத்திவந்தாரென்றும் ஆக இம் மூன்று காரணங் களைக்காட்டி இவற்ருல் [இப்பெருமைகளைப் பொருமல்] அவ்வாசார்யர்கள் இவரைப் பரிபவப்படுத்தவும் ஹிம்ஸிக்கவும் தலைப்பட்டார்களென்றெழுதியிருக்கிறீர். ஸதா சார்ய ஸேவையும் ஸதுபதேச ச்ரவணபாக்யமு மில்லாமை காரணமாக நீர் இங் ஙனே அபசாரப்பட்டாலும் "பிசாசஸ்ய பிசாசபாஷயாவக்தவ்யம்" என்கிற நியாய த்தையும் கடந்து நான் ஆர்ஜவத்தோடு உம்மைத் தெளிவிக்கிறேன்.

518. "ஸ்ரீ ரங்கத்திலிருந்த சில ஸ்ரீ வைஷ்ணவர்கள்" என்று ஸாமான்யமாக் எழுதியிருந்தீரானால் தொலையட்டுமென்று விட்டுத் தொலைக்கலாம். அங்கு ஆசார்ய பீடத்தை அலங்கரித்திருந்த மஹாசார்ய ஸார்வபௌமர்களின் மீது உம்முடைய அஸூயாப்ரவாஹம் ஏறிப்பாய்ந்திருக்கிறது. அவ்வாசார்யர்கள் என்றைக்கோ திரு நாட்டுக்கெழுந்தருளி விட்டாலும் உலகம் நிறைந்த புகழ்வாய்ந்த அவர்களது திவ்ய ஸ்ரீ ஸூக்திகள் மறையவில்லையே. ஸ்வாமி தேசிகனும் ஸாதரம் சிரஸாவஹித்து தம்முடைய க்ரந்த நிர்மாணங்களுக்கும் வழிகாட்டியாகக் கொண்ட அந்த திவ்ய

க்ரந்தங்களை ஸேவிக்கு முலகமெல்லாம் "நாந்ருக்வேதவிநீதஸ்ய நாயஜுர் வேத தாரிணஃ, நாஸாம வேதவிதுஷச் சக்ய மேவம் ப்ரபாஷிதும்; நூநம் வ்யாகரணம் க்ருத்ஸ்நம் அநேந பஹுதா ச்ருதம்." என்று சக்ரவர்த்தி திருமகனுர் திருவடி திறத்தில் சொன்னதெல்லாம் இவ்வாசிரியர்களுக்கே யொக்குமென்று கண்ணுங் கண்ணீருமாயிருந்து கொண்டாடா நின்றது. ஸ்ரீரங்கத்தில் ஆசார்ய பதவியை யலங்கரித்த ஒவ்வோராசாரியரும் "இதிஹாஸ புராணங்களையதிகரித்து, பரபக்ஷப்ரதி க்ஷேபத்துக்குடலாக நியாய மீமாம்ஸைகளையதிகரித்துப் போது போக்கு அருளிச் செயலிலேயாயிருந்தவர்கள்" என்று பெரிய வாச்சான் பிள்ளையருளிச் செய்யும் படியான அதிசயத்தைப் பெற்றிருந்தவர்களென்பதை இப்பிறப்பி லறிந்திலீராகிலும் மறு பிறவிகளிலறியப் பெறுவீர். அத்தகைய மஹாசார்யர்களின் திவ்ய ஸ்ரீ ஸூக்திகளைக் காதால் கேட்கவும் கண்ணால் காணவும் பாக்கியம் பெருததற்கு ஆயுச் சேஷமெல்லாம் அநுதபிக்க வேண்டுமத்தனை.

519. *குழாங்களாயடியீர்! உடன் கூடி நின்ருடுமினே* என்ற விடத்திற்கு வியாக்கியான மிட்டருளின ஆசார்ய ஸார்வபௌமர்கள் "அவன் பக்கலிலே நிக்ஷிப்த பர்ராயிருக்கிற நீங்கள் நால்வரிருவர் இங்கிருக்கும் நாலு நாளும் த்யாஜ்யமான அர்த்த காமங்களைப் பற்றிச் சீறுபாறென்றிராதே நம் பெரிய குழாத்திலே போய்ப்புகுமளவும் ஒருமிடரு யநுபவிக்கப் பாருங்கோள்" என்றருளிச் செய்யா நின்ருர்கள். இப்படிப்பட்ட உதாரஹ்ருதயர்களை, D. R. ஸ்வாமிந்! நீர் அஸூயுக்கனென்று நெஞ்சால் நினைப்பதும் மஹாபசாரமாயிருக்க, எழுதிவைப்பதும் செய்தீரே; மறு மறு பதிப்புகளும் செய்து போருகிறீரே. யதிராஜ ஸப்ததியில் இந்த ச்லோகம் தெரியுமே உமக்கு "ஸ்வஹஸ்தே நோத்க்ஷிப்தைஸ் ஸ கலு நிஜகாத்ரேஷு பஹுலம் கலத்பிர் ஜம்பாலைர் ககனதலமாவிம்பதி ஜட:" என்பது இந்த நிதர்சனம் உமக்கே பொருந்து மென்பதை இதோ காட்டுகிறேன், பாரும்.

520. நீரெழுதின ப்ரக்ருத தேசிக வைபவத்தில் (பக்கம் 11 ல்) "அத்வைத க்ரந்தங்களுக்குப் போட்டியாக யாதவாப்யுதயம் ஸங்கல்பஸூர்யோதயம் முதலிய க்ரந்தங்கள் அவதரித்தன" என்றெழுதியுள்ளீர். இது ஸ்வாமிக்கு எவ்வளவு அவஹேளனமான வார்த்தை என்பதை அந்தோ அறிந்திலீரே. ஆசாரியர்கள் ஸ்வாநுபவ பரீவாஹமாக க்ரந்தங்களையருளிச் செய்பவர்களே யன்றி, போட்டியிடுவதென்பது எங்கேனு முண்டா? "சங்கரபாஷ்யத்திற்குப் போட்டியாக ஸ்ரீ பாஷ்யமிட்டருளினர்" என்றுற் போன்ற பங்க்திகளை ஓர் ஆசார்யராவது எழுதியிருக்கக் கண்டீரோ? நீரொருவர் தவிர வேறொருவர் இப்படி யெழுதக் கற்றவருளரோ?

521. இதேயிடத்தில் தானே அதையும் எழுதியிருக்கிறீர்; எதையும்? "ஸ்வாமியிடம் பொருமை கொண்டவருள் ஒருவரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர் இவருடன் போட்டியிட்டதன் பலனுக...." என்பதையும். போட்டியிடுவதும் போட்டிச் சண்டைக்கு வருவதும் கி. பி. 1800 க்குப் பிறகு உங்கள் திரளின் காரியமே யொழிய, பரமஸத்வநிதியான ஸ்வாமி தேசிகனே அவருடைய மதிப்பிற்குரிய ஆசாரியர்களோ போட்டியிடுவதென்பதை நெஞ்சாலும் நினையார். கனவிலும் கருதார்.

521, "க்ருஷ்ணமிச்ர னென்கிற அத்வைதி ப்ரபோத சந்த்ரோதய மெழுதிக் கொணர்ந்து ஸ்வாமியோடு தர்க்கிக்க முயல உடனே ஸங்கல்ப ஸூர்யோதயத் தைக்காட்டி அவனை ஓடச்செய்தார்" என்று ஒருவர் எழுதுவது, "க்ருஷ்ணமிச்ரன் ஸ்வாமியோடு பதினெட்டு நாள் வாதாடித் தோற்றோழிந்தான்" என்று மற் றொருவர் எழுதுவதுமாயிருந்தகாலத்தில், பெரியவாச்சான்பிள்ளை தனிச்லோக வியாக்கியானத்தில் ப்ரபோத சந்த்ரோதயச்லோக முதாஹரிக்கப் பட்டிருப்பதை யும் மற்றும் பலசான்றுகளையுமெடுத்துக் காட்டி தேசிகனுக்கு வெகுகாலம் முற் பட்டவன் ப்ரபோத சந்த்ரோதய கர்த்தா' என்று நாம் கைகொள் கனிபோல் நிரூபித்த பிறகு (காலஞ்சென்ற) சேட்லூர் நரஸிம்ஹாசாரியார் "ப்ரபோத சந்த் ரோதயகாரருக்கும் தேசிகனுக்கும் ஸமாகமம் நேர்ந்ததாக எழுதினது தவறுதான்' என்றிசைந்துபோனார் தாமெழுதிய தேசிக சரித்திரத்தில் பக்கம் 137 ல். நீர் வெகு தளுக்காக "அத்வைதக்ரந்தங்களுக்குப் போட்டியாக யாதவாப்யுதயமும் சங்கல்ப சூரியோதயமும் அவதரித்தது" என்றெழுதினீர். நீர் எழுதியுள்ள தேசிகசரித்தித்தை ஆதியோடந்தமாக ஆராய்ந்தால் தேசிகனுக்கு ஒவ்வொருவரோடும் போட்டியிடுவ தான பணியென்பதொன்றே உமது நிருபணமாகத் தேறுகின்றது.

522. உலகில்போட்டியிடுவதென்பது ரஜஸ்தமோகுண வச்யர்களின் காரியமே யொழிய ஸாத்விகர்களின் காரியமன்று என்பதைக் கூடவா நீர்அறியீர்? நம்முடைய புனிதமான நூற்களில் போட்டியென்கிற அஸப்யச் சொல் காணவே முடியாதது. அஹம்பாவத்தோடு செய்யும் துர்வழக்கைப் போட்டி யென்பர்கள். இதை முந்துற முன்னம் தேசிகன் திருமுடிமேல் ஏற்றிவிட்டு அடுத்தபடியாக அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் திருமுடிமீதும் ஏற்றிவிட்டீர். பாத்ரபத்யப் போட்டி, வாழிப் போட்டி, ப்ரபந்தப் போட்டி யென்று பல போட்டிகள் பிற்காலத்தில் ஏற்பட்டது போல முற்காலத்திலுமுண்டென்று காட்ட முற்பட்டீரந்தோ!

523. யாதவாப்புதய மென்கிற மஹாகாவியம் ரஸசூனமென்பது மட்டுமன்றிக்கே ஒவ்வொரு சுலோகமும் அனுபவம் வழிந்த சொல்லல்லவா? இதைப் போட்டி நூலென்று சொல்லத் துணிந்தபடியெங்ஙனே? 'ஸ்ரீ வசன பூஷணாதி ரஹஸ்யங் களுக்குப் போட்டியாக ரஹஸ்யத்ரய ஸாராதிகள்; ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தங் களுக்குப் போட்டியாக தேசிகப்ரபந்தங்கள்; சரணாகதி கத்யாதிகளுக்குப் போட்டி யாக ரகுவீரகத்யம்; பஞ்சஸ்தவாதிகளுக்குப் போட்டியாக ஸ்தோத்ரங்கள்; ஸித் தித்ரய வேதார்த்தஸங்க்ரஹாதிகளுக்குப் போட்டியாக ந்யாயஸித்தாஞ்ஜநாதிகள் ....என்றெழுதிக் கொண்டு போவீர் போலும். ஆளவந்தார் ஸ்ரீ மந்நாத முனிகளின் திவ்ய ஸூக்தியவதாரத்தைப் பற்றி யருளிச்செய்யும் போது " அபரிமிதாச்யுத பக்திதத்வஜ்ஞாநாம்ருதாப்தி பரிவாஹசுபைர் வசோபி:" என்றருளிச் செய் கிறார். அங்கு ஸ்தோத்ரபாஷ்யத்தில் ஸ்வாமி தேசிகன் என்ன ஸாதிக்கிறாரென்று பார்க்கவேண்டா; மூல ஸ்ரீ ஸூக்தியினழகு போதுமே. நீர்பால் நெய்யமுதாய் நிரம்பினவேரி நெளிக்குமாபோலே ஜ்ஞானம்ருதாப்திநிமிகிற வாய்கரை மிடைந்து மொழிபட்டோடும் கவியமுத வெள்ளத்தைப் போட்டிக்கிட்ட சுவடியாக நீர் எழு தத் துணிந்தது .. ....இதற்கு மேல் என்ன சொல்லி முடிப்பது? ஒன்றும் தோன்ற வில்லையே. ஸாத்விகமானமுறை ஒருவரிலும் காணப்படவில்லையே.

524 வியப்பினும் வியப்பாக வொன்றெழுதியுள்ளீர்; "ஸ்வாமி சந்தமிகுதமிழ் மறையோனென்று தம்மைப் பேசிக்கொண்ட சீர்மைக்கே தனியாகவொரு தனியனை ஸமர்ப்பிக்க வேண்டாவோ? தமிழில் *சீரொன்று தூப்புல்* எனுந் தனியனைப் பிள்ளை லோகாசார்யர் ஸமர்ப்பித்தார் என்பதும் ப்ரஸித்தம்" என்பதாக.

525. D R ஸ்வாமிந்! தத்வமுக்தாகலாப வியாக்கியானமானஸர்வார்த்தஸித்தியில் 'மரீசிகாம்பஸி ஸ்நாத: கபுஷ்பக்ருதசேகர:, ஏஷ வந்த்யாஸுதோ யாதி சசச்ருங்க தநுர்த்தர:." என்றோர் அற்புதமான சுலோகம் உதாஹரித்தருளுகிறார் ஸ்வாமி தேசிகன். அது தான் நினைவுக்கு வருகின்றது. தேசிகப்பிரபந்தங்களென்று நீங்கள் வைத்துக் கொண்டிருப்பவற்றில் ஒன்றிலாவது தூப்புலென்னுஞ்சொல் ஏறியிருக்கிறதாவென்று பார்க்கலாகாதா?

526. அத்திகிரிமாகாத்மியத்தை "மெய்விரத நன்னிலத்து மேன்மையேத்தி வேதாந்தவாசிரியன் விளங்கினனே" என்று ஸ்வாமிதாம் தலைக்கட்டியான பின்பு "சீராருந்தூப்புல் திருவேங்கடமுடையான்" என்றொரு வெண்பாவைப் புனைந்திருக்கிறீர்கள். கீழ்ச் செய்யுளில் இல்லாத விஷயம் இதில் ஏதேனுமுண்டோவென்று பார்த்துத் தெளிய முடியவில்லையா உமக்கும்? பிரபந்தசாரத்தைப் பற்றிப் பின்னையும் கிளற வேண்டுமோ? அப்பய தீக்ஷிதாக்ரஹாரத் தூப்பலை தென் திருவரங்கம் கோயில் கொண்ட பிள்ளைலோகாசாரியரும் தெரிந்து கொண்டு தனியனிட்டருளினரென்பதுண்டே, இதைப்பற்றிக் கேளும்.

இதுதான் சுவைமிக்கது.

527 நன்னூலில் "தன்னாசிரியன் தன்னொடு கற்றோன், தன் மாணாக்கன் தகுமுரைகாரனென்று, இன்னோர் பாயிரமியம்புதல் கடனே" என்னுஞ் சூத்திரத்தினால் தனியனிடுகிற அதிகாரம் ஆசார்யனுக்கே முதன்மையாக மொழியப்பட்டிருத்தலால் பிள்ளைலோகாசாரியர்தேசிகனுக்கு ஆசாரியராயிருந்தால் அந்த ஆசார்யத்வ நிபந்தனமாகத் தனியனிட்டாரென்று தாராளமாக இசையலாம். அதில் ஒரு குறையுமில்லை. இருவர்க்கும் ஸமாகமப்ரஸக்தியே யில்லையென்பதைக் கீழே ப்ரக்க நிரூபித்திருக்கிறோமாகையாலே அவ்வாசிரியர்மீது ஆரோபிக்க நினைப்பதே அஸமஞ்ஜஸம். தூப்புலென்னுஞ்சொல்லை ஸ்வாமி தேசிகன் எப்படியறிய ப்ரஸக்தியில்லையோ அப்படி பிள்ளைலோகாசார்யரும் அறிய ப்ரஸக்தியில்லையென்பதை, D. R. ஸ்வாமிந்! ஸத்யம் சபே; இதனை உமது உள்ளம் உள்ளபடியறிந்திருக்கின்றது. ஆனால் இருபதாண்டுகட்கு முன்பு அறிந்திருக்கவில்லைதான்; அப்ரத்ருஷ்யமான நிருபணங்களினாலும் தெளிவு விளையவில்லையென்றால் *தேனொடு வண்டாலும் பாசுரத்தின் ஈற்றடியேயாக வேணும்.

528. *அப்ரியஸ்ய ச பத்த்யஸ்ய வக்தா ச்ரோதா ச துர்லப:* என்றதில் வக்த்ருதுர்ப்பிக்ஷமில்லாமே விஜ்ஞாபிக்கிறேன் கேளீர். இப்போது விளக்கொளி யெம்பெருமான் ஸன்னிதியில் ஸ்வாமி தேசிகனெழுந்தருளி யிருக்குமிடந்தான் அவருடைய திருமாளிகையாயிருந்ததென்று ப்ரஸித்தியுள்ளது. இதில் உமக்கும் விப்ரதிபத்தியிராது. அந்த ஸ்தலத்திற்குத் திருத்தண்கா என்கிற திருநாமம் திவ்யப்ரபந்தங்களில் ஏறியுள்ளது. அவ்வளவேயுமன்றிக்கே சரணாகதிதீபிகையில் நம் தேசி

க்ன் திருவாக்கினாலும் மொழிபெயர்க்கப்பட்டு ஏறியுள்ளது. இத்தகைய திவ்ய மான வ்யபதேசத்தைக் கொள்ளாதே விட்டிட்டு நியாயாலய வ்யவஹாரங்க ளிற் கூட ஏறியிராத ஒரு தூப்பலைப் பிடித்துக் கொண்டு மெல்லுவது உமது நெஞ்சுக்கு இசைந்திருக்கிறதா? பிறரை வஞ்சிக்கலாம்; நெஞ்சைக் கூடவா வஞ் சிக்க முடியும்? நெஞ்சை வஞ்சிப்பவர்கள் நஞ்சினுங் கொடியரல்லரோ?

529. ஸ்ரீமான் அய்யாக்ருஷ்ண தாதாசார்ரியார் சொல்லிக்கொண்டிருந்தார்— "அண்ணாவப்பங்கார் பழநடை விளக்கத்தில் ரங்கநாதன் தூப்புல் பிள்ளையை முனிந் தோமென்று நிக்ரஹித்ததாகஎழுதியிருக்கையாலே தூப்புலென்பது ஸ்ரீ ரங்கநாதன் திருவாக்கிலேயே வந்ததாக ஒப்புக்கொண்டு தீரவேண்டும்" என்று. வாஸ்தவம்; இத்தகைய ப்ரபல ப்ரமாணத்தினால் வெற்றி பெற்றுவிடலாம். இதனால் ஸ்ரீரங் கநாதன் முனிந்ததாகச் சொல்லப் படுவதொன்றே உண்மையெனத் தேறிநிற்கும்.

530. ஆமில்டன் வாராவதி அம்பட்டன் வாராவதியானதோடு நில்லாமல் **Barbers Bridge** என்று மொழிபெயர்ப்பும் பெற்றுவிட்ட- **Tinnavelly Tanjore Conjeeverum**"இத்யாதிகளான திரிபுகள் **Tirunelvely, Tanjavur Kancheepuram** இத்யாதி யாக யதாவஸ்திதாகாரம் பெற்றதுபோல். ஆமில்டன் வாராவதியும் ஒரு கால விசேஷத்திலே யதாவஸ்திதாகாரத்தை பெறக்கூடும்; அந்தப்பேறு ப்ரக்ருத விஷயத்தில் நேராதபடியன்றோ செய்திட்டீர்கள் "தும்பைவன மென்பது தான் தூப்பலாயிற்று" என்று உண்மையை இசைந்து கொள்ளுங்காலம் வாராமற் போகாது; ஒருகால் வந்தேதீரும்.

531. அப்பயதீக்ஷிதர் தேசிகனுக்கு ஸமகாலத்தவரென்றும், அப்போதே தும்பை வனமேற்பட்டு தூப்பலென்கிற கொச்சைநாமமும் வழங்கிவந்ததென்றும் சொல்லியு மெழுதியும் தீர்ந்தாலொழிய உய்யும்வகையில்லையென்று திடமாகக்: கொள்ளீர்.

532 தூப்புல் விஷயத்தை ஒருவாறு முடிக்கிறேன். இதுவொரு பெரிய விஷய மன்று. தூப்புலென்று புராதனமாகவேயுண்டென்று கொண்டாலும் ஆழ்வார் திருவாக்கிலவதரித்த திருத்தண்காவை விட்டிட்டு தூப்பலையொருகாலும் ஆசாரியர்களாதரியார்கள். நவீனர்கள் நவீனச்செயல்கள் பலவற்றில் இதனை ஆதரித்துக்கொண்டது மொன்றென்று உணர்த்திவிட்டு மேலே செல்லுகிறேன். திரு நாங்கூர் பிராந்தத்திலுள்ள திருத்தேவனார் தொகையை கீழச்சாலை யென்றும் பாண்டி நாட்டிலுள்ள வரகுணமங்கையை நத்தமென்றும் வழங்குவது ஸர்வஜநீநமா யிருப்பது போல இதுவுமிருந்து விட்டால் விசாரமில்லை, அப்படி யில்லையே.

533 D.R. ஸ்வாமிந்! தேவரீரெழுதிய ஸ்ரீ தேசிகவைபவத்தை அடிதொடங்கியே ஆராயப் புகுகின்றேன். 'ஸ்ரீ தேசிகாவதாரகாரணம்' என்பது முதல் விஷயமாகக் காண்பது. கீதாசார்யன் அவதாராத்யாயத்தில் * யதா யதா ஹி தர்மஸ்ய .... ததா ஆத்மாநம் ஸ்ருஜாம்யஹம்* என்றருளிச்செய்ததை யுட்கொண்டு 'எப்பொழு தெப்பொழுது தருமம் குறைகின்றதோ. அப்பொழுதெல்லாம் நான் உலகத்தில் தோன்றுகின்றேன் என்பது கண்ணனுடைய வார்த்தை' என்றெழுதியுள்ளீர். இதில்

தவறென்றும் இல்லையாயினும், தேசிகனுடைய அவதாரத்தை யெழுதத்தொடங்குகையில் இந்த ச்லோகம் ஸ்மிருதி விஷயமானபோது இதன் அந்தரங்கப் பொருளை யெழுதியிருக்கலாமே; [ஸம்பவாமி ததா ததா] 'அஹம் ஸம்பவாமி என்னுமல் *அஹம் ஆத்மாநம் ஸ்ருஜாமி* என்றதின் ரஸ்யமும் ரஹஸ்யமுமான பொருள்—மேலே ஏழாம் அத்யாயத்தில் *ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்* என்று கண்ணபிரான் தானே கூறி யிருப்பதற்குச் சேர 'ஆத்மாநம் ஸ்ருஜாமி=ஜ்ஞாநிநம் அவதாரயாமி, என்று பொருள் வரைந்து இத்தகைய ப்ரதிஜ்ஞைக் கிணங்க எம்பெருமான் ஜ்ஞாநிநாம் அக்ரேஸரரான ஸ்வாமி தேசிகனை அவதரிப்பித்தருளினன் என்றெழுதியிருந்தால் மிகவழகியதாயிருக்குமன்றோ. நிரவத்யமாக தேசிக வைபவத்தை இனி எழுதப்புக்கால் இதை நினைவிற்கொள்க.

534. மேலே "அதன் பிறகு ஸ்ரீ பாஷ்யகாரர்" என்று தொடங்கி யெழுதுகையில் எம்பெருமானுருடைய பிரயாஸங்கள் சிறிதுபயன்பட்டனவேயன்றிப்பெரும்பாலும் நிஷ்ப்பலமாயின வென்று காட்டியுள்ளீர். "காசியில் களவு செய்யக் காஞ்சியில் கன்ன மிட்டான்" என்கிற ஜனச்ருதியை நினைப்பூட்டுமிது. ஸ்வாமி தேசிகன் *த்ராதம் ஸம்யக் யதீந்த்ரை:* என்றருளிச் செய்ததற்கு அவத்யம் கற்பித்தீரானீர். த்ராதம் என்று வெறுமனே சொல்லாமல் ஸம்யக் த்ராதம் என்று அருளியிருப்பதன் ஆழத்தை யறிந்திலீரந்தோ!

535. இங்கு ஏனெனில் என்று தொடங்கி— "ஸ்ரீபாஷ்யகாரமதத்தை அவலம்பித்த சிலரே அவருடைய அருளிச் செயல்களை அநாதரித்தும் அவமதித்தும் வந்ததோடு அவர் அநுஷ்டித்துக்காட்டிய ப்ரபத்திமார்க்கத்தை தூஷித்தும் வந்நார்கள்." என்றெழுதியுள்ளீர். இது தேசிகஸூக்திக்கு நேர்விருத்தமானது. உம்மைப்போலே நாம் எதையும் ப்ரதிஜ்ஞாமாத்ரத்தோடு நிறுத்துவதுமில்லை, ப்ரமாண சூன்யமாய் விப்ரலம்பமாக எழுதிவைப்பதுமில்லையே; ஆகவே விளங்கச்சொல்லுகிறேன் கேளும்.

536. தேசிக ரஹஸ்யங்களில் ஸம்ப்ரதாயபரிசுத்தியென்பது முதல் நூல். இதில் ஸ்வாமி ஸாதிப்பதாவது —"ஸ்ரீபாஷ்யகாரருடைய சிஷ்ய ஸம்ப்ரதாயங்களில் ஒன்றிலும் அர்த்த விரோதமில்லை, வாக்யயோஜநாபேதமேயுள்ளது; தேசகாலவ அவஸ்தாவிசேஷங்களாலேவரும் அநுஷ்டாநவைஷம்யம் சாஸ்த்ராநுமதம்" என்று; இவ்விரண்டு வாக்யங்களின்பொருள் இன்னதென்று அறிவீரோ? ஸ்ரீபாஷ்யகாரருடைய சிஷ்யஸம்ப்ரதாயங்களென்று ஸாதிக்கிற ஸ்வாமிக்கு விவக்ஷிதமான சிஷ்ய ஸம்ப்ரதாயங்கள் எவை? என்று கேட்டால் என்னவிடையிறுப்பீர். அவற்றில் ஒன்றிலும் அர்த்தவிரோதமில்லை யென்றும், ஏதோ ஸ்வல்ப யோஜநாபேதமேயுள்ளதென்றும் தேங்காயுடைத்தாற்போல் ஸ்வாமி ஸாதித்திருக்க, நீர் அகாண்டே பூர்வாசாரியர்களை நிந்திக்க வழிதேடுவது என்னே!

537. வக்கீல்களுக்கு நியாயவாதிகளென்று பெயர். நீர் சிறந்த வக்கீல்; நியாயப் பிசகாகப் பேசவோ எழுதவோ கூடாது. கலியின் கொடுமையினல் நவீனகாலத்தில் ஏற்பட்ட வைஷம்யங்களை முன்னோர் தலையிலுமேற்றி, அந்த முன்னோர் மொழிந்த முறைகளைக் கண்டிக்க தேசிகாவதாரமென்று சில பாமரர்கள் திரளு

மிடங்களில் பேசுவது, அத்தோடு நில்லாமல் எழுதியும் வைப்பது பெருமாளெதிரே கண்ணை மூடி மூடித் திறப்பதும் அசும்பொழுக நிற்பதுமான வுமக்குத் தகுமா? அஸ்தாநே செவி கொடுத்ததன் பயனல்லவா இது.

538 பழையக்கதையொன்று நினைவூட்டுகிறேனிங்கு... கீர்த்திமூர்த்தியான ஸ்ரீ. உபயவே. வி. வி. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி வேதாந்ததீபிகாபத்ரிகைக்கு ஆசிரியராக இருந்த காலத்தில் ஸ்ரீ உ. வே. (காஞ்சீ) அய்யா. ஸ்ரீ கிருஷ்ண தாதாசாரியரை ஏதாவது விஷயதானம் பண்ணவேணுமென்று கேட்டுக் கொண்டார். இவர் ஸம்ப்ரதாய பரிசுத்திக்கு வியாக்கியான மெழுதுவதாக ஆரம்பித்து மூலத்தோடு எள்ளளவும் பொருந்தாதபடியும் வீண் விவாதங்களை வளர்த்தியும் காடுபாய்ந்த வாக்யார்த்தமாக எழுதிக் கொடுத்தார்; அது வேதாந்த தீபிகையில் அச்சேறியும் வந்தது. அதில் ஆமூலாக்ரம் கண்டநீயங்களான விஷயங்களே நிரம்பியிருந்தபடியால், அப்போது நடந்துகொண்டிருந்த நமது வைஜயந்தீபத்ரிகையில் 'வேதாந்த தீபிகாவிமர்சம்' என்றொரு கட்டுரையை வெளியிடநேர்ந்தது

அதிலுள்ள நமது வாக்யச்ரேணிகளை யநுவதிக்கிறேன் கேளும்;

539 "இருபத்தைந்து வருஷகாலமாக ஸகல ஜந மநோஹரமாய் நடந்துவந்த வேதாந்ததீபிகை யென்னும் பத்திரிகை இரண்டொரு வருஷகாலமாய் விஷபிந்து கலந்த அம்ருதகும்பம் போல் இருக்கின்றது. ஸஞ்சிகை தோறும் விஷம்கலந்தே வருகின்றதென்பதுபற்றி ஸ்ரீவைஷ்ணவவுலகம் பரிதபிப்பது வாசாமகோசரம். அஃது என்ன? என்னில்; இந்த தீபிகையில் ஸம்ப்ரதாய பரிசுத்தி 'வியாக்கியானம் என்கிற ஒரு வியாஸம் ஸஞ்சிகைதோறும் வெளிவந்து கொண்டிருக்கிறது; இதில் என்ன விஷயமென்றால், பிள்ளைலோகாசார்யரையும் மணவாளமாமுனிகளையும் வாய்வந்தபடியும் கைபோனபடியும் தூஷிப்பதேயாம். விசாலமான திருவுள்ளங் கொண்ட ஸர்வஜ்ஞரான வேதாந்த தேசிகன் அருளிச்செய்த பரம புனிதமான க்ரந்தத்திற்கு இப்படியொரு வியாக்கியானம் பிறக்க நேர்ந்ததை ஆலோசிக்குமிடத்தில் "ஸ்ரீதேசிக திவ்யஸூக்திகளுக்கு இப்படியும் ஒரு பரிபவம் உண்டாக பகவத் ஸங்கல்பமாயிற்றே!" என்றே மஹான்கள் பரிதபிக்கலாகிறது. அன்றியும் அந்த வியாக்கியானத்திற்கு வேதாந்ததீபிகை இடமளிப்பதானது மிகவும் சோசநீயம். அந்த வியாக்கியானத்தை யெழுதுபவரான ஸ்ரீ அய்யா கிருஷ்ண தாதாசாரியாரிடத்தில் தீபிகைத் தலையாசிரியர் ஏதோ வொரு காரணத்திற்காக ப்ரதிபத்தி வைத்திருக்கலாம்; அதற்குப் பலனாக அவர் அந்தப் பெரியவருக்கு எவ்வளவும் காணிக்கைகள் ஸமர்ப்பிக்கலாம். ஆனால், அவர் எழுதின நிந்தனைச் சுவடியை அமுதமயமான தீபிகையில் வெளியிட அனுமதியளித்த தானது உலகமெல்லாம் வெறுக்கத்தக்கதாகவே யுள்ளது. சென்ற கார்த்திகைமாதத்தில் வெளிவந்த வேதாந்ததீபிகையை நண்பர்கள் பலரும் பார்த்திருப்பீர்களே. அதில் (பக்கம் 278ல்) பத்திராதிபரான உவே. வி. வி. ஸ்ரீ. ஸ்வாமி அற்புதமான வொரு வியாஸம் எழுதியுள்ளார். கல்நெஞ்சும் கரையும்படியான ரீதியில் அந்த வியாஸம் வெகுஅழகாகஅமைந்திருக்கின்றது. (அதாவது) விஷயவிசாரம்செய்பவர்கள் ஒருவரையும் எள்ளளவும் வைபக்கூடாதென்பதை இரும்புபோல் வலிய நெஞ்சமும்

இறையிறையுருகும் வண்ணம் மிக இனிதாக எழுதியிருக்கின்றார். அதற்கு அடுத்த வியாஸ மாகவே மேலே நாம் சொன்ன (அய்யா தாதாசார்யருடைய) ஜகதா சார்ய நிந்தனைச்சுவடி வெளிவந்துளது. ஆராய்ந்து பார்க்குமிடத்தில் அந்த அய்யா கிருஷ்ண தாதாசாரியருக்கு உபதேசரூபமாகவே அந்த வியாஸம் வி. வி. ஸ்ரீ. ஸ்வாமியால் எழுதப்பட்டதென்று மஹான்கள் கருதுகின்றார்கள். அனுவ ச்யகமாக, அல்லது அப்ரஸக்தமாக அந்த வியாஸத்தை வி. வி. ஸ்ரீ. ஸ்வாமி எழுதமாட்டாரன்றோ! ஸம்ப்ரதாய பரிசுத்தி வியாக்கியானத்திலுள்ள நிந்தனைகள் வி வி. ஸ்வாமிக்கும் பொறுக்க முடியாமற் போகவே தமது வருத்தமகுதியை அந்த வியாஸத்தின் மூலமாக வெளியிட்டார்போலும். அந்த நிந்தனைச்சுவடியை வெளியிடாமலேயிருந்திட்டால் தாமும் நிர்வேதப்படவேண்டியிராது; ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹமும் பரிதபிக்கவேண்டியிராது. அய்யாக்ருஷ்ண தாதாசாரியர் ஸ்ரீ வசநபூஷண தூஷணம் என்றொரு சுவடியெழுதி யிருக்கின்றாராம். ஸ்ரீ வசநபூஷணார்த்தங்களைப் பற்றின தூஷணங்களை அதில் வெகுவிரிவாக எழுதியிருக்கிறாராம். இதை சென்ற கார்த்திகை மாதத்து வேதாந்த தீபிகை கூசாமல் வெளியிடுகின்றது, ஸ்ரீ வசந பூஷணதூஷண மென்கிற அந்த க்ரந்தத்தையே தீபிகை வெளியிட்டுவிடலாமே. இனிமேல் வெளியிடும்போலும். அய்யா தாதாசாரியர் ஸ்ரீவசநபூஷண வியாக்கியான திவ்ய ஸ்ரீஸூக்திகளைக் களவாடித் தம்முடைய க்ரந்தமாக வெளியிட்டுக் கொள்ளப் பிறந்தவரேயன்றி ஸ்ரீ வசநபூஷண மஹார்த்தங்களை லவலேசமும் அறியப் பிறந்தவ ரல்லர் என்பது பண்டே பலகாலும் பரக்க நிருபிதம். தம்முடைய ஞானம் இவ் வளவு என்பதைச் சிறிதும் தெரிந்துகொள்ளாமலே இந்தத் தாதாசாரியர் எழுதி வருகின்றார். பல நூற்றாண்டுகட்கு முன்பு எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் அஹோபிலம் ஸ்வாமி தமது புருஷகார மீமாம்ஸையில் "அதிகம்பிரஸந்நர்ப்பம் ஸ்ரீமத் வசநபூஷணம்" என்றருளிச்செய்யப் பெற்றதும் "ஸர்வஜ்ஞலோககுருநிர்மிதம் ஆர்யபோக்யம் வந்தே ஸதா வசனபூஷண திவ்யசாஸ்த்ரம்" என்று ஆசார்ய சிகாமணிகளால் போற்றப்பெற்றதுமான ஸ்ரீ வசநபூஷண திவ்ய சாஸ்த்ரத்திற்கும் இவர்க்கும் நெடுந்தூரமுண்டு. பிள்ளை லோகாசார்யர் ஸாதித்திருப்பது இன்னது, தேசிகன் ஸாதித்திருப்பது இன்னது என்று இவர் அறிந்துகொண்ட பின்பன்றோ ஒன்றை தூஷித்து மற்றொன்றை பூஷிக்க இவர் இறங்கவேண்டும். அஜ்ஞான அந்யதாஜ்ஞானங்களே வடி வெடுத்திருக்குமிவர் தேசிக திவ்யஸூக்திகளில் வாய்வைக்கச் சிறிதும் தகுதி யுடையரல்லர் என்பதை ஸத்ஸம்ப்ரதாய பரிசுத்தி முதலியவற்றில் விசதமாகவும் ஸாரமாகவும் நிருபித்திருக்கின்றேன். எந்த எந்த விஷயங்களில் "ஸ்ரீ வசநபூஷண திவ்ய சாஸ்த்ர மஹார்த்தங்களில் விரோதமிருப்பதாகவும், அவற்றுக்கு மாறு பாடாக தேசிகன் திருவுள்ளம்பற்றி யிருப்பதாகவும் இவரும் இவரைப்போன்றவர் களும் எழுதினார்களோ, அந்த விஷயங்களெல்லாவற்றிலும் விரோத லவலேசமும் இல்லையென்றும், பிள்ளைலோகாசார்யருடைய திருவுள்ளத்தையே தேசிகனும் பெரும் பாலும் தழுவிச் சென்றிருக்கிறாரென்றும் நாம் மிக விபுலமாகவே நிருபித்துப் பிறர் அசைக்கநினைக்கவு மொண்ணாதபடி நிலைநாட்டி க்ரந்தங்களைப் பரவவிட்டிருக்கிறோம். அந்த க்ரந்தங்கள் வைஜயந்தியிலேயே பெரும்பாலும் வெளிவந்தவை. அவற்றை யெல்லாம் இந்த தாதாசார்யப்ரப்ருதிகள் நித்ய பாராயணத்தில் வைத்துக்

கொண்டிருப்பவர்களே. வாயைக் கையைத்திறக்க முடியாதபடி இவர்களைக் கட்டிப் போட்டு வைத்திருக்கின்ற அந்த க்ரந்தங்களுக்கு வித்வஜ்ஜந மநோஹரமாக விடைகளை வெளியிட்டு விட்டல்லவோ இவர்கள் வேறொன்று செய்ய வேண்டும். இந்த அய்யாதாதாசாரியார் ஒரு அஸம்பத்தச் சுவடியை யெழுதி அதற்கு அண்ணங்கராசார்ய பராஜயம் என்று பெயரிட்டார். அது வெளிவந்த மூன்றுவது நாளிலேயே பாறிப் பறந்தொழிந்து போயிற்றென்பதை உலகமறியும். அப்படியிருந்தும் அந்த பராஜயச்சுவடி இன்னமும் உயிரோடிருப்பதாகச் சிலர் விளம்பரம் செய்து வருகிறார்கள். இதில் ஒரு பாமரனும் விப்ரலம்ப மடையமாட்டான். எந்த விஷயத்திற்கு நாம் விடைகூறாமல் பராஜயப்பட்டிருக்கிறோமென்பதை மாத்திரம் உலகம் தெரிந்துகொள்ளும்படி ஸ்பஷ்டமாகவும் சுருக்கமாகவும் தீபிகையோ ஸம்ரக்ஷிணியோ வெளியிடுமாளுல் அந்த பத்ரிகையின் ஆசிரியரிடம் நாம் சிஷ்யவ்ருத்தி செய்வது திண்ணமென்று சபதம் செய்கிறோம். இந்தப் பொறுப்பை வேதாந்த தீபிகைக்கே முதலில் கொடுக்கிறோம்." (இதெல்லாம் தேவரீர் முன்பு பாராததன்று.

540 டி. ஆர். ஸ்வாமிந்! மேலும் கேளீர்;

வேதாந்ததீபிகா விமர்சத்திலேயேயுள்ள நம்முடைய வாக்ய ச்ரேணிகளே இவையும்

'ஸம்ப்ரதாய பரிசுத்திமுடிவில்—மற்றுமிப்படி வேதாந்த ஸித்தங்களான தத்வஹித புருஷார்த்தங்களில் பரஸ்பரவிரோதமும் பூர்வாபரவிரோதமுமில்லாத' என்றொரு பங்க்தி தேசிகனருளிச் செய்திருப்பது. [இது கார்த்திகை மாஸ தீபிகையில் வந்துளது.] இதன் வியாக்கியானத்தில் அய்யாதாதாசாரியர்—பிள்ளைலோகாசார்யருடைய வாக்குக்கள் பரஸ்பர விரோதமும் பூர்வாபரவிரோதமும் நிரம்பியவை என்று எழுதிவருகிறார். பரஸ்பர விரோதமாவது என்ன? பூர்வாபர விரோதமாவது என்ன? என்பதை முன்னம் விளக்கிக் காட்டவேண்டியது வியாக்கியான கர்த்தாவின் கடமை. காவ்யநாடகாலங்கார சாஸ்த்ரங்கள் பயின்றவர்களாலன்றோ அங்ஙனம் விளக்கிக் காட்டமுடியும். ஆசார்ய நிந்தனையொன்று தவிர வேறொன்று மறியவில்லாத இவர் "பம்போ! பவநமாருதம்" என்பதற்கு விசேஷார்த்த காலக்ஷேபம் ஸாதித்த கட்டளையில்தானே ஸாதிப்பர். பரஸ்பர விரோதமென்றால் ஒன்றோடொன்று முரண்படுதல் என்று பொருள். பூர்வாபர விரோதமென்றால் முன்னும் பின்னும் முரண்படுதலென்று பொருள். ஒருவன் 'ஸௌவர்ணம் பார்த்திவம்' என்று முன்னே சொல்லியிருந்து, பின்னே 'ஸௌவர்ணம் தைஜஸம்' என்று சொல்லியிருந்தால் முன்வார்த்தையோடு பின் வார்த்தை முரண்பட்டிருத்தலால் இங்குப் பூர்வாபர விரோதமென்பர்கள். இதையே பரஸ்பர விரோதமென்று சொல்லவும் குறையில்லை; மேலே குறித்த [பார்த்திவம் - தைஜஸம் என்ற] இரண்டு வாக்கியங்களும் ஒன்றோடொன்று விரோதிப்பதால். ஆகவே பூர்வாபர விரோதமென்பதும் பரஸ்பர விரோதமென்பதும் ஒன்றேயாய் முடிந்தது."

541 இத்யாதிபுராதன பாரதம் போதுமே; 'திருமங்கையாழ்வார் முதலடியில் வாடினேன்வாடி யென்றார்; அதற்கு நேர்விருத்தமாக இரண்டாமடியில் கூடினேன்

கூடியென்றூர், அதற்கும் நேர்விருத்தமாக மூன்றுமடியில் ஓடினேனோடி யென்றூர்; அதற்கும் நேர்விரோதமாக நான்காமடியில் நாடினேன் நாடியென்றூர்" என்று ஒருவர் பேசிக்கொண்டிருப்பர்; அப்படியன்றோ இந்தத் தாதாசார்யருடைய அக் கிலி பிக்கிலி வாக்யார்த்த முள்ளது." D.R. ஸ்வாமிந்! அந்தவேதாந்த தீபிகாவிமர்ச நூலுக்கு இப்போதும் துர்ப்பிக்ஷமில்லை. வேண்டிய பிரதிகள் கிடைக்கும். மேல் விஷயம் கேளீர்.

542. இப்படி விமர்சநூல் வெளிவந்திருக்கின்றதென்பதைத் தெரிந்து கொண்ட வேதாந்த தீபிகாபத்ராதிபரான வி. வி. ஸ்ரீ ஸ்வாமி (அடிக்கடி காஞ்சிக்கு வருபவராதலால்) ஒரு நாள் வந்தவுடனே எனக்கு ஸந்தேச மனுப்பி என்னை வரவழைத்து "விமர்சத்திலுள்ள விஷயங்களை எனக்கு விளங்கச் சொல்லவேணும்" என்றூர். விமர்சநூல் அய்யாதாதாசாருடைய விகி தங்கள் அஸம்பத்தங்கள் என்பதற்கு அவதாரிகாமாத்ரமேயொழிய, மேல் கண் டன பாகம் அடுத்த ஸஞ்சிகையில் அச்சிடுவதற்கு ஸித்தமாயிருந்தது; அதையும் கையிலெடுத்துக் கொண்டு வி. வி. ஸ்ரீ ஸ்வாமியின் இல்லத்திற்குச் சென்றேன்.

543. நெடுநாளாகவே அடியேன்பால் பரமப்ரீதிகொண்டிருந்த V.V.S. ஸ்வாமிக்கு அய்யா தாதாசாருடைய அஸம்பத்தங்களை யெல்லாம் உபபாதித்தேன். விவேகி யென்றூல் அவர் விவேகி; மத்யஸ்தரென்றூல் அவர் மத்யஸ்தர். நியாயவாதி யென்றூல் அவர் நியாயவாதி. சிறந்த பெருந்தன்மையாளர். அவர்செய்ததுகேளீர்.

544. என்னுடைய உபபாதனங்களை ஆர அமர நெஞ்சில் வாங்கிக் கொண்டு "இவற்றையெல்லாம் தேவரீர் என்னிடம் கொடுத்தால் நான் தீபிகையிலேயே வெளியிடத்தடையில்லை" என்றூர். சொற்படி நடக்குமா? என்றேன். 'என்னோடு சிரபரிசயமிருந்தும் தேவரீர் இப்படி கேட்கிறதே!' என்றூர். அப்போதே அவர் கையில் கொடுத்துவிட்டேன். அவரும் ஸந்தோஷத்தோடு அக்கட்டுரையைப் பெற்றுக்கொண்டார். "இந்த மாதத்து வேதாந்த தீபிகையிலேயே வெளிவரும்' என்றுசொல்லி என்னையனுப்பி விட்டார்.

545. இதையெல்லாம் கேள்விப்பட்ட அய்யா க்ருஷ்ணதாதாசாரியார் அவரிடம் ஓடிச்சென்று 'இப்படியாமே அப்படியாமே; அதை தேவரீர் அச்சிடவே கூடாது' என்று ஆந்தனையும் சொல்லிப்பார்த்தார்; *ந மே மோகம் வசோ பவேத்* என்றே சொல்லிப் போகவிட்டார். தாதாசார் மனத்தாங்கலோடு திரும்பிவிட்டார் (அந்த மனவேற்றுமை நெடுநாள் தொடர்ந்திருந்தது.) என்னுடைய மறுப்புரை வேதாந்த தீபிகையிலேயே விரைவில் அச்சாகி வெளிவந்துவிட்டது, D. R. ஸ்வாமிந்! அதை தேவரீர் பாராதவரல்லீர். இஃது இந்திரஜாலமன்றே. உலகமெல்லாம், பார்த்த-பார்த்துக்கொண்டிருக்கிற விஷயந்தானே.

546 இதுகிடக்க, மேல்நடந்ததையும் நினைவூட்டுகிறேன், கேளும். ஸ்ரீரங்கத்தில் கீழச்சேரிபரவஸ்து வென்பாரொருவர் தேசிகஸூக்தி ஸம்ரக்ஷணி யென்றொரு பத்திரிகை ஆரம்பித்தார். மேலே பிரஸ்தாவித்த அய்யா தாதாசாரியர் அதில் "அண்ணங்கராசார்ய பராஜயம்" என்று பெயரிட்டு ஒருகட்டுரை வெளியிடுவித்

தார். அதற்கு ப்ரத்யக்ஷரகண்டனமாக எத்தனை ஸஞ்சிகைகள் வெளிவந்தன தெரியுமோ? ''அய்யாக்ருஷ்ணவித்யாவைபவம்'' என்கிற புத்தகம் அப்போது வெளிவந்திருக்கிறது. அதிலுள்ள தேதி 21-5-39 அதையெல்லாம் நீர் பார்த்திருந் தும் அதில் மாண்டுபோன விஷயங்களையே மீண்டும் கிளப்பியுள்ளீர்.

547. நீர் எழுதியிருப்பதை மீண்டும் அநுவதிக்கிறேன்— ''ஸ்ரீபாஷ்யகார மதத்தை அவலம்பித்த சிலரே அந்த பாஷ்யகாரருடைய அருளிச் செயல்களை அநாத ரித்தும் அவமதித்தும் வந்தார்கள்'' என்று கூசாமல் எழுதியிருக்கிறீர். அந்தச் சிலர் யாரென்று கேட்கிறேன். சொல்லுவீரா? மேலே நான் உதாஹரித்த ஸம் ப்ரதாய பரிசுத்தி ஸ்ரீஸூக்திகளுக்கு அடுத்த இன்னொருவாக்யமும் கேளீர்; (அதாவது) ''சோராபராததந்தை மாண்டவ்யன்பக்கலில் ஆரோபித்தாப்போலே ஸ்வேச்சைக்கு அநுகுணமாக அநிபுணர் சொல்லுமநுவக்தாக்களுக்கே தோஷ மாம்'' என்பது. இதன் பொருளையறியீர். கேண்மின்; 'ஸ்ரீபாஷ்யகாரருடைய சிஷ்ய ஸம்ப்ரதாயங்களில் ஒன்றிலும் அர்த்தவிரோத மில்லையென்று நாம் (தேசிகன்) கல்வெட்டு செய்திருக்கச் செய்தேயும் விரோதமிருப்பதாகச் சில அசடுகள் சொல்லிக் கொண்டிருப்பது அஸமஞ்ஜஸம், என்பது ஸ்பஷ்டமான பொருள்.

548. இப்படிப்பட்ட தேசிக ஸூக்திகளைப் புறக்கணித்து, அவருடைய திருமுடி மீது வாழ்ந்த ஆசாரியர்களை உள்ளத்திற்கொண்டு 'சில ஸ்ரீவைஷ்ணவர்களே ஸ்ரீபாஷ்யகார ஸூக்திகளை அநாதரித்தும் அவமதித்தும் வந்தார்கள்' என்று உள்ளேயுள்ள விஷத்தைக் கக்கியிருக்கிறீர்.

549. ஸ்ரீ பாஷ்யகார சிஷ்யர்களில் ஒருவரான சோமாசியாண்டானென்பவர் ஸ்வாமி திருவுள்ளத்திற்கு விருத்தமாக ப்ரபத்தியை ஸர்வாதிகாரமன்றென்றும், சாரீரகமீமாம்ஸையில் முதல்ஸூத்ரம் மட்டுமே சாஸ்த்ராரம்ப ஸமர்த்தனம்— சதுஸ்ஸூத்ரீ சாஸ்த்ராரம்ப ஸமர்த்தனமன்று என்றும் எழுதிவைத்திருக்கிறார். அவரைத் தான் இங்கு நான் ப்ரஸ்தாவித்தேனென்கிறீரா?

550. ஸ்ரீ ரஹஸ்யத்ரய ஸாரத்தில் சரமச்லோகாதிகாரத்தில் (ஸ்வாமியின் காரிகையொன்று)— * இத்தமர்த்தாவிசேஷேபி யோஜநாபேதமாத்ரதஃ, ப்ராசாம் விவாதஸ் ஸம்வ்ருத்தோ பாஷ்யகாரைஃ அவாரிதஃ * என்பதாக, அர்த்தத்தில் வாசியின்றிக்கே யோஜநாபேதமாத்ரத்தைக் கொண்டு முன்னோர்கள் பாஷ்யகா ரர் காலத்திலேயே விவாதப்பட்டார்களென்றும், அந்த விவாதத்தை பாஷ்ய காரர் தடுக்கவில்லை [ஆமோதித்திருந்தார்] என்றும் இந்த காரிகையினால் தெரி விக்கப்படுகிறது. இதெல்லாம் உம்மைப்போன்ற ஸுகுமாரமதிகளுக்கு நிலமல் லாத விஷயங்கள். இவற்றில் அவகாஹனக்ஷமதையின்றிக்கே நிரர்த்தக வாக்யா பாஸங்களை யெழுதிவைத்திருப்பது விரலுக்குந்தகாத வீக்கம்.

551. ''பாஷ்யகாரர் அநுஷ்டித்துக் காட்டிய ப்ரபத்தி மார்க்கத்தைத் தூஷித் தும் வந்தார்கள்'' என்கிறீர். 'அந்த ப்ரபத்திமார்க்கம் எது? அதை தூஷித்த வர்கள் யாவர்? தூஷித்த விதம் யாது? என்று கேட்டால் ஒன்றுக்காவது விடை யிறுப்பீரோ? ''லவணவணிஜஃ கர்ப்பூரோத்கம் கிமித்யபிமந்வதே.'' என்ற யதி

ராஜஸப்ததி ஸூக்திதான் நினைவுக்கு வருகிறது. "ஆர்த்தோபச்சந்தனம் கத்யம் பாஷ்யம் து பரரஞ்ஜனம், இத்யாவிலதியோபி........" என்கிற தேசிக காரிகையைத் தலைகாலின்றிக்கே யாரிடமோ கேட்டு "பிறமதங்களைக் கண்டிப்பதற்கல்லது பாஷ்யம் பயன் படாதென்றும், கத்யங்கள் பகவத் விஷயத்தில் ஆர்த்தியுடையோர்களுக்குக் கண்துடைப்பதற்காக ஏற்பட்டனவென்றும் இப்படியாகச் சிலர் ஸ்ரீ பாஷ்யகாரரது அவதாரமே பயனற்றதாகும்படி உபதேசங்களையும் உபந்யாஸங்களையும் செய்துவரத் தலைப்பட்டனர்" என்றெழுதியுள்ளீர். அவர்கள் யாவரென்று கேட்டால், சிலர் என்று தானேயெழுதியிருக்கிறேன், யாரோ சில வழிப்போக்கர்களைச் சொன்னேன் என்பீர். தலைமேல் 'தேசிகாவதார காரணம்' என்று மகுட மிட்டுவிட்டு அவிசாரிதரமணீயமாய் "காகஸ்ய கதி வா தந்தா:? மேஷஸ்யாண்டம் கியத்பலம்" என்றாற் போன்ற வம்பு தும்பு விஷயங்களால் ஏடுகளை நிரப்பியுள்ளீர், சில வழிப்போக்கர்களுடைய உக்திகளைக் கண்டிப்பதற்கு தேசிகாவதாரம் என்று அரும் பெரும் பொருளைக் கண்டறிந்து வெளியிட்டுவிட்டீர்.

552. சில அன்னார்த்திகளைத் திரட்டிவைத்துக்கொண்டு "ஏரண்டோபி த்ருமாயதே" என்னும்படி வீற்றிருந்து கண்ணீரை வருவித்துவிழவிட்டுப் பேசும்போது இந்தச் சிலருடைய திருநாமங்களை வெளியிடுவீர்போலும். இன்னார் இன்னவிடத்திலே இப்படியெழுதிவைத்திருக்கிறார்; நம் தேசிகன் அந்த இன்னவிடத்திலே இன்னவாறு கண்டித்துளர்" என்று நிருபிக்கத் திறமையிருந்தாலல்லவோ இப்படியெழுத வேண்டும்' யாரைமயக்க இப்படி யெழுதினீர்? இடித்தபுளியாக இருக்கலாகாது.

553. இந்த ஸந்தர்ப்பத்தில் தன்னளவறியாதே ஒன்றெழுதியுள்ளீர்; (அதாவது—) "மேலும் ஸ்ரீ பாஷ்யகாரர் ஆழ்வார்களின் அருளிச் செயல்களைத் தமது ஏகாந்த அநுபவத்திற்கு விஷயமாக்கி வந்தாரேயன்றி அவ்வருளிச் செயல்களைப் பற்றிச் சிறிதளவும் தம் க்ரந்தங்களில் ப்ரஸ்தாவிக்கவில்லை! அதனால் உபநிடதங்களும் திவ்யப்ரபந்தங்களும் தனித்தனியாக வெவ்வேறு கட்சியாரால் கொண்டாடப்பட்டுவந்தனவேயன்றி அவற்றின் ஒற்றுமை உலகில் நன்கு அறியப்படவேயில்லை." என்பதாக.

554. எம்பெருமானார் திவ்ய ப்ரபந்தங்களைத் தமது ஏகாந்தாநுபவத்திற்கு வைத்துக் கொண்டிருந்தாரென்றால் என்ன அர்த்தமையா? ஸவிநயமாகக் கேட்கிறேன், சொல்லுவீரா? ஸ்வாமி திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழிப்பொருள் கேட்டதாக தேசிகன் ஸம்ப்ரதாய பரிசுத்தியிலும் குருபரம்பராஸாரத்திலுமாக இருமுறை பொறித்து வைத்துள்ளார். ஒருவர்க்கும் தெரியாமல் இருளிலே சென்று கதவடைத்துக்கொண்டு ஏகாந்தமாகக் கேட்டு வந்தாரென்கிறீரா? திவ்ய தேசங்களில் நடைபெறும் இயல்கோஷ்டிகளில் அந்வயியாதே ஒதுங்கிவர்த்தித்தாரென்கிறீரா? 'பல்லாண்டு பல்லாண்டு' என்று தமிழைச் சொன்னால் வாய் வெந்துபோமென்று "தந்தஸம்வத்ஸரம் தந்தஸம்வத்ஸரம்" என்று சொல்லிக் கொண்டிருந்த உங்களினத்தவர்களைப்போல் உடையவரும் சொல்லிக் கொண்டிருந்தாரென்கிறீரா? "தமிழ் மறைகளாயிரமும் ஈன்ற முதல்

தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன்" என்கிற திருவாய்மொழித்தனியனை வீம்புக்காகவாவது சொல்லி வருகிறீர்களே, தமிழ்மறைகளாயிரத்தையும் இராமானுசன் மொய்ம்பால் வளர்த்த விதம் யாது என்று கேட்டால் வாய் திறக்கவல்லீரோ?

555. உடையவர் வாழிதிருநாமத்தில் மறையதனில் பொருளனைத்தும் வாய் மொழிந்தான் வாழியே, மாறனுரை செய்த தமிழ் மறைவளர்த்தோன் வாழியே" என்று வைணவவுலகமெல்லாம் அநுஸந்தித்து வருகிறது. இவ்விரண்டுவாக்கியங்களில் உடையவருடைய உபய வேதாந்த நிர்வாஹகத்வம் அற்புதமாகப் பேசப்பட்டது. உடையவருடைய ஸகல ப்ரபாவங்களையும் கேட்டார் வாய்க் கேட்கையன்றிக்கே ஸாக்ஷாத்தாக அநுபவித்த திருவரங்கத்தமுதனார் "நாட்டிய நீசச் சமயங்கள் மாண்டன, நாரணனைக் காட்டிய வேதம் களிப்புற்றது, தென்குருகைவள்ளல் வாட்டமிலா வண்டமிழ் மறைவாழ்ந்தது மண்ணுலகிலீட்டிய சீலத்திராமானுசன்றன் இயல்வுகண்டே" என்றார் நூற்றந்தாதியில். எம்பெருமானார் எங்கிருப்பர்? என்ன; "திருவாய்மொழியின் மணந்தருமின்னிசை மன்னுமிடந்தொறும்புக்குநிற்கும் குணந்திகழ்கொண்டலிரமானுசன்" என்றார் அவ்வமுதனார்தாமே.

556. முதலியாண்டானருளிச் செய்த அற்புதமானதொரு சுலோகம்கேளீர்;—

"புரா ஸூத்ரைர் வ்யாஸ: ச்ருதிசதசிரோர்த்தம் க்ரதிதவாந்
விவவ்ரே தத் ச்ராவ்யம் வகுலதரதாமேத்ய ஸ புந:,
உபாவேதௌ க்ரந்தௌ கடயிதுமலம் யுக்திபிரஸௌ
புநர் ஜஜ்ஞே ராமாவரஜ இதி ஸ ப்ரஹ்மமுகுர:" என்பது.


557. இதன் கருத்து யாதெனில்; வியாஸர் அவதரித்து ப்ரஹ்ம ஸூத்ர மியற்றி வேதாந்தப் பொருள்களை விளக்கினர்; அந்த வியாஸர்தாமே மீண்டும் நம்மாழ்வாரான வடிவெடுத்துச் செவிக்கினிய செஞ்சொற்களாலே அதை விவரித்தார்; இந்த உபய வேதாந்தங்களையும் உபபத்திகளாலே ஏக சாஸ்த்ரமாக்கியருள்வதற்கு அவரே மீண்டும் ஸ்ரீராமாநுஜராகத்தோன்றினர் என்பதாம்.

558. இதையெல்லாம் நாம் த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வத்திலே நீருமுக்கப் பாரதமும் ராமாயணமுமாகப் பன்னியுரைத்தோம். இவ்வளவையுங் கண்டு வைத்து 'பாஷ்யகாரர் அருளிச்செயல்களைக் கதவு மூலையில் அநுபவிக்க வைத்துக் கொண்டிருந்தார்" என்றெழுதுகிறீர். "முண்டத்வாத் மோஷகத்வாத் முகுமுகு மடவாதாரசத்வாத் தடத்வாத் தண்டத்வாத் பூபுஷத்வாத்". போன்ற சுலோகங்களை எம்பெருமானார் ஸாதிக்க வில்லையென்பது வாஸ்தவம். எம்பெருமானார் மட்டுமா? ஆளவந்தார், பிள்ளான், ஆழ்வான், பட்டர், எங்களாழ்வான், அம்மாள், அப்புள்ளார்.... யாருமேஸாதிக்க வில்லையன்றே. ஏன்ஸாதிக்கவில்லை? அவர்களுக்கு உபய வேதாந்த ஸங்கமனம் செய்ய சக்தியில்லாமையாலே. ஆமாம் என்று தலையாட்டுவீர்.

559. D. R. ஸ்வாமிந்! தேசிகாவதாரகாரணகலாப நிருபணத்தில் —"பலர்; பிராட்டியின் பெருமையை மறைத்து அவ்விஷயத்தில் பல தவறான ஸித்தாந்தங்களை ப்ரவசனம் செய்து வந்தனர்;அவற்றைத் திருத்திப் பிராட்டியின் உண்மைப் பெருமையை உலகில் ஸ்தாபிக்க வேண்டியதும் அவசியமாயிற்று ...... இதற்காகவும் தேசிகனவதாரம் அவசியமாயிற்று" என்றெழுதியுள்ளீர். உமக்கு இந்தமருள் 1944 வரை இருந்திருக்கலாம். அதன் பிறகு என்னுடைய பல நூல்களினால் இந்த மருள் அறவே அகன்றிருக்குமென்று நம்புகிறேன்; நம்புகிறேனென்பது போதாது, சபதமிட்டுச் சொல்லுகிறேன். இந்த மருள் உமக்கு மட்டுமன்று, உமதுவகுப்பில் பெரும்பாலார்க்கு உள்ளதே; அனைவர்க்கும் இது மாய்ந்தொழிந்ததென்பது உமக்குத் தெரியாததன்று.

560. ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமியின் காலத்தில் தொடங்கின இந்த சர்ச்சை அப்போதே தலை மடிந்திருந்தும் இடை இடையில் பலப்பலர் கிளப்பிப் பங்கப்பட்டொழிந்தனர். முடிவாக ஸ்ரீஉவே. மதுராந்தகம் வித்வான் வீரராகவாசார்யர் ஸ்வாமிக்கு அடியேனளித்த ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யமும் வைதிகமநோஹரா ஸஞ்சிகைகளும் தேவரீர்க்கும் கிடைத்திருக்கின்றன; அவற்றின் ஸாரம்—பிராட்டிக்குப்புருஷகாரத்வத்தையும் எம்பெருமானுக்கு மோக்ஷப்ரதத்வத்தையும் ஸ்தாபித்த ஆசார்யர்களில் முன்னணியில் நிற்பவர் ஸ்ரீமந் நிகமாந்தமஹா தேசிகன் ஒருவரே அவருடைய ஸூக்திகளில் *த்ருடபூர்வச்ருதோ மூர்க்க:* இத்யாதியான சில அஸமஞ்ஜஸவார்த்தைகள் மஹர்ஷிவாஸுதேவாசார்யஸ்வாமி போல்வாருடைய ஸித்தாந்தப்படி இடைச்செருகலாயிருக்கவேண்டும்; அப்படியில்லையெனின் மதிப்ரம்சந்தான் கொள்ள வேண்டியதாகும்-என்பதே.

561 D. R. ஸ்வாமிந்! இப்படி நாமெழுதுவதைக் காணும்போது கண் கலங்கும்; திருக்கண்சிவக்கும். வெகுவெகுஸம்ப்ரமங்கள் விளையும். என்ன பண்ணுவது? கீதையில்"தஸ்மாத் அபரிஹார்யேர்த்தே ந த்வம் சோசிதுமர்ஹஸி" என்கிற சுலோகம் அழுவார் கண்ணைத் துடைக்கத் தோன்றியது. அதையே இங்கு நினைவூட்டுகிறேன். நான்கொண்டாடும் பரமப்ராமாணிகரானவொரு வடகலை வித்வான் இதையெல்லாம் பரிபூர்த்தியாகக் கடாக்ஷித்துவிட்டு எழுதினார்—"மிகவும் டேஞ்ஜரான நோயின் சிகித்ஸைக்கு அமெரிக்காஸர்ஜன் வந்துதான் என்னசெய்யமுடியும்? பீஸைப்பெற்று ஜோப்பியில்போட்டுக்கொண்டு பேசாதே திரும்புவதுதான் செய்ய முடியும்- என்றெழுதினர்.

562 இது நான் ஸ்வப்ரதிஷ்டையாக எழுதிக்கொண்டதாகவே யிருக்கட்டும்; ஒன்றுசெய்யவேண்டுகிறேன்.'பெரியபிராட்டியார் பெருமையும் த்ருட பூர்வச்ருத மூர்க்க மஹிமையும்" என்று மகுடமிட்டு ஒரு பெரிய கட்டுரை, அல்லது ஒரு ஸ்ரீ கோசம் எழுதுவித்து எழுநூற்றாண்டு நினைவுமலராக வெளியிட்டு அதில் என்னுடைய வாதங்களை யெல்லாம் துர்வாதங்களாக்கி உதறித்தள்ளி விடும்படி பெரு முயற்சி யெடுத்துக்கொள்வீராக. என்னை நிந்திக்கவேணுமென்றிருந்தால் தனிப்பட ஒரு அத்யாயமோ பல அத்யாயங்களோ நிந்தித்து முடித்து விட்டு, விஷயசர்ச்சையில் நிந்தைகலசாமல் பிராட்டி விஷயமான தேசிக திவ்யஸ்ரீஸூக்திகளனைத்தையும்

ஸங்கமனம் பண்ணிப் பிரசுரம் செய்வது. விவாதங்களில் தடஸ்தர்களாய் நிற்கும் ஸ்ரீமதுபயவே. வித்வான் கோமல் ஸ்வாமி போல்வாருடைய அபிநந்தனம் பெற்று வெளியிடுவது. இதற்காக எழுநூறு ரூபா அடியேனுடைய ஸமர்ப்பணை. கமிட்டிக்கு 350 ரூ. பிரத்யாக்க்யானம் பண்ணுகிற வித்வானுக்கு 350 ரூபா என்று மநோரதாநாம் அதடா: ப்ரவாஹா:,

563. ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் *த்ருடபூர்வச்ருதோ மூர்க்க: என்கிற ஸம்பாவனை ஒன்றேயன்று;*இதி மந்தைரிதம்ப்ரோக்தம்*இத்யாதி ஸம்பாவனைகளுமுண்டு; ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமி இதில் வெகுகாலம் போராடி ஸமஸ்யமாநோக்திஸௌஷ்ட விமர்சம் என்கிற (அடியேனுடைய )இருநூறுசுலோகங்கள் (உரையுடன்)கொண்ட நூலைப்பெற்று, அதில் *ப்ரஹ்மேசாதி ஸுரவ்ரஜஸ் ஸதயிதஸ் த்வத்தாஸதாஸீ கண:* என்கிற ஆளவந்தார் ப்ரயோகத்தை யெடுத்துக்காட்டினதைக் கடாக்ஷித் தருளின பின்பு 'சாந்தோஸ்மி, விச்ராந்தோஸ்மி' என்று நின்றருளினர். தேசிகனுடைய ஸ்ரீ ஸூக்திகளிலும் ''அத்ராஸ்தி பஹு அஸாமஞ்ஜஸ்யம்,, என்று மூதலிக்க வல்ல உங்கள் வித்வான்கள் இக்காலத்தில் மலிந்திருப்பதால் அன்னவர்களைக் கொண்டு, பண்டு தேசிகன் ஸ்தாபித்தருளினதாக நீர் கண்டறிந்த பிராட்டியின் பெருமைகளை நிலை நாட்டியருள்வீராக.

564. குலப்பெருமை, அம்மாளின் அநுக்ரஹம், வித்யாப்யாஸம், திருவயிந்திரபுரம் எழுந்தருளுதல், இல்லறம், காலக்ஷேபம் ஸாதித்தல், வடதேசயாத்திரை— என்று மகுடங்களிட்டு எழுதியுள்ள ஸ்வாமிவைபவங்களை எவ்வளவு மேம்பட எழுதிக்கொண்டாலும் ஆக்ஷேபம் தோன்றுமோ? மூலாதாரமில்லாமல் எழுதும் விஷயங்களானாலும் இதராசார்ய தூஷணத்தில் புகாமல் ஸ்வாமியின் பெருமையை எவ்வளவு ஏற்றிப்பேசுவதாயிருந்தாலும் உம்மைக்காட்டிலும் மிக மிக அதிகமாகவே மகிழ்ச்சியடைவேன். நானெழுதாத பெருமையுண்டோ?

565. ஸ்ரீ காஞ்சியில் அய்யா ரகுநாத தாதாசாரியர் ஸ்வாமியென்கிற மஹான் இருந்தார். அவர் ஸ்ரீ காதிஸ்வாமிபக்கலில் ஹ்ருதயபூர்ணமான அன்புள்ளவர். ஸ்வாமி பாம்பே நகரத்தில் எழுந்தருளியிருந்தபோது ஸ்வாமியின் பெருமைகளைக்கண்டு உகப்பதற்காகவே ஒருவரைத் துணைகொண்டு அவ்விடம் வந்து ஒரு வாரமிருந்து பெருமகிழ்ச்சியுடன் கச்சிக்குத் திரும்பின பிறகு சில ஆப்தர்களிடம் '' காதிஸ்வாமியின் பெருமைகளை என்ன சொல்லுவேன்! எட்டுயானைகள்; பதினறு குதிரைகள் ......" என்று சொல்லிக்கொண்டு போகையில், அவரோடுகூட பாம்பே வந்தவரும் பக்கத்திலிருந்தார்; 'எட்டுயானையில்லை ஒருயானைதான்; பதினறுகுதிரைகளில்லை, இரண்டு குதிரைகள்தான்' என்றார். அப்போது அந்த தாதாசாரியர் ஸ்வாமி ஸாதிக்கிறார்- 'அப்பா! நான் சொல்லுகிற யானை குதிரைகள் அதிகப்படியாகவேயிருக்கட்டும்; அவற்றுக்கு நீ தீனி போடவேண்டாம்' என்றார்; இந்தவார்த்தையின் அழகுக்குப் பலர் வியந்தார்கள். இத்தகைய அதிசயோக்திகளால் யாருக்கு என்னஹானி? வைதிகமனோஹரா 163 ல் 294, 295 வாக்யச்ரேணிகளை வாசித்துப் பார்க்க வேண்டுகிறேன். அஸம்பாவிதமான பெருமைகளையெழுத அவற்றில் ஆக்ஷேபம் செய்ய நேர்ந்து கண்டனமெழுதினல் அது தேசிக த்வேஷத்தினலாய

தென்று ப்ரவசனம் செய்வது பாமரர்களின் பணியாகும். "தேசிகன் திருக்குமார ரான நயினாராசாரியர் *ஸ்ரீ சைலேசதயாபாத்ரத் தனியனுக்கு வியாக்கியானம் செய்தருளினார்" என்று ஒருவர் எழுதிவைக்க, அதையொரு தென்கலை ஸ்ரீ வைஷ் ணவரே கண்டித்தால் இது மணவாளமாமுனிகள் பக்கலில் த்வேஷத்தினாலென்று சொல்லுமவன் பேதையனேயன்றோ.

566. அற்புதச்செயல்கள் என்று மகுடமிட்டு "சிலருக்கு ஸ்வாமி விஷயத்தில் பொறாமையும் ஏற்பட்டது; அவர்கள் இவரைப் பரிபவத்திற்குள்ளாக்க முயற்சிகள் செய்தார்கள்" என்றிங்ஙனே யெழுதிப் போருகிறீர்; இப்படியெழுதுவதை ஸங் கல்ப பூர்வகமாக விட்டுத் தொலைக்கும்படிக்கு மிக மிகப் பிரார்த்திக்கின்றேன் எழுதுவதை மட்டுமன்று, நெஞ்சால் நினைப்பதைக்கூட ஸவாஸநமாகவிட்டுத் தொலைக்கவேண்டும். ஜநிதர்மாக்களுக்கு க்ஷுத்பிபாஸைகள் போல் ஈர்ஷ்யாஸூயை கள் இயற்கையில் பிறப்பன. இவை அவர்ஜநீயங்கள். இத்தகைய தூர்ஜனங்கள் ஸ்வாமிஸகாசத்தில் அணுகவும் மாட்டார்கள்; அணுகினாலும் ஸ்வாமி அன்னவர் களைக் கண்ணெடுத்தும் பாரார். க்ஷுத்ரர்களோடெல்லாம் போட்டியிட்டாரென்று மீண்டு மீண்டுமெழுதி ஏடுகளை நிரப்புவது இனி வேண்டா; இது அறவே மறக்கத் தக்கது. இது மஹாபாதகத்திலும் கொடிதுகாணும்.

567. "பிரதிவாதிகளை ஜயித்தல்" என மகுடமிட்டு எழுதுகையில் எவ்வளவு ஆசார்யாபசாரத்தை மூட்டை கட்டிக்கொண்டிருக்கிறீரந்தோ! "அக்காலத்தில் ஸ்ரீரங்கத்தில் ஆசார்யகம் செய்து கொண்டிருந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் திவ்யப்ர பந்தத்தை மட்டும் அதிகரித்து ஸ்வகோஷ்டியில் உபந்யாஸம் செய்ய வல்லவர் களாக மாத்திரமிருந்தார்களேயன்றி ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களைப் பரிசயம் செய்து பிறமதத்தினரோடு வாதம் செய்ய உரியராக இல்லை; ஆகவே காஞ்சீ புரத்தில் போட்டிச் சண்டையிடுவதற்கென்றே பிறந்த ஸர்வதந்த்ரஸ்வதந்திரரை ஸேவிக்கக் கருதின தென்னரங்கன் தன்னிடம் வரவழைத்துக் கொண்டான்". என்றெழுதியிருக்கிறீர். 'அஸ்தாநே செவி கொடுத்ததன்பயனென்று கீழேயெழு தினதை மீண்டுமெழுதுகிறேன்.

568. ஸ்ரீ பாஷ்யமென்றால் என்ன? அது வெளுப்பா கறுப்பா என்றுகூட அறியகில்லாத நீர் ஸ்ரீரங்கத்தில் ஆசார்யபதவியில் வாழ்ந்த பெரியார்கள் ஸ்ரீபாஷ்யமறியாதவர்கள் என்றும், திவ்யப்ரபந்தம் மட்டும் கற்றவர்கள் என்றும் கை கூசாமல் மனங் கூசாமல் எழுதுகிறீர். 650 ஆண்டுகட்குமுன்னே வாழ்ந்த மஹான்களின் யோக்யதையைப் பற்றியெழுத நீரா அதிகாரி? *ப்ராரப்தம் உத்தமகுணா ந பரித்யஜந்தி* என்பதற்கு-உத்தமசீலர்களையும் ப்ராரப்தகருமம் விடா தென்றுபொருள்கூறி ப்ராரப்த பண்டிதரென்று கோஷ்டீபுரம் ஸ்வாமியால் விருது சாத்தப் பெற்றிருந்தவொருவருடைய உபதேசமன்றோ உம்மை இப்பாடுபடுத்து கிறது. இந்த துருபதேசங்களெல்லாம்என்றைக்கோ மாண்டொழிந்தனவே.

569. ஸ்வாமி முதன்முதலாக ஸ்ரீரங்கமெழுந்தருளின காலத்தில் அங்கு ஆசார்யபீடம் வஹித்து ப்ரவசனம் செய்து கொண்டிருந்த ஸ்ரீ வைஷ்ணவர் ஒருவர்கூட இல்லை. வாசாமகோசரமான உபப்லவங்கள் மிக்கிருந்தகாலம் அது. அத்வைதிகள் வாதத்திற்கு வைணவர்களைப் பிடித்திழுத்தார்களென்று நீர் எழுதியிருக்கிறீரே, அந்த ஸமயத்தில் அங்கு அந்த ஸம்பவத்திற்கு ப்ரஸக்திலேசமும் கிடையாது. தவிர, முக்கியமாக ஒன்று கேளும்; ச்ருதப்ரகாசிகா சார்யரான ஸ்ரீஸுதர்சநபட்டர் அப்போது அங்கெழுந்தருளியிருந்ததாகவும் தேசிகனிடத்தில் ஸ்ரீகோசத்தையும் இரு திருக்குமாரர்களையும் ஒப்படைத்ததாகவும் நீரேயெழுதியுள்ளீர்; ஸ்ரீரங்கவாஸிகளான ஆசார்யர்களைப் பற்றி நீர் எழுதியுள்ள தூஷணை முன்னம் ச்ருதப்ரகாசிகாசார்யர் பக்கலிலேயே ஏறுகின்றதென்று தெரிந்து கொள்வீராக. இதற்குமேல் சொல்லுவீர் —ச்ருதப்ரகாசிகாபட்டர் அப்போது அங்கு ஆசார்யக்ருத்யம் செய்திலர்; நடாதூரம்மாளுக்கு பகவத்விஷயபரிசய மில்லாமையாலே அதனை யதிகரிக்க ஸ்ரீரங்கம் சென்றிருந்தார்; ஆகவே அவர் சிஷ்யராக இருந்தாரேயன்றி ஆசார்யராக இல்லை; ஆசார்யர்களாயிருந்தவர்களையே நான் தூஷித்திருக்கிறேன் என்பீர்,

570 நதிமன்றங்களில் பெட்டிமேலேற்றி "ஸர்வசக்தியுள்ள ஸ்வாமி முன்பாக ஸத்யமாய்ச்சொல்லுகிறேன்; நான்சொல்வதெல்லாம் ஸத்யம் ஸத்யந்தவிர; வேறில்லை" என்று சொல்லுவித்து வாக்குமூலம் வாங்குவதுபோல் வாங்கவேணுமய்யா; இன்னாரினையாரென்று பாராமல் ஆசாரியர்களை தூஷிப்பதொன்று தானே உமக்குத்தெரியும்; ச்ருதப்ரகாசிகாசார்யருட்பட ஸகலாசார்யர்களையும் நீர் தூஷித்தவர்தானே; ஸத்யமாய்ச் சொல்லும்' என்று பிரார்த்தித்தால் ஆமாம் ஆமாம் என்ன வேணுமேயொழிய வேறென்றும் சொல்லப்போகாதென்று நான் ஸத்யமாய்ச் சொல்லுகிறேன்.

571. ஆளவந்தாருக்கு ஸ்ரீபாஷ்யபரிசய முண்டாவென்று கேட்கிறேன் இல்லையென்றுதான் சொல்லித்தீரவேண்டும். அப்படியானால் அவர் "மீமாம்ஸா சாஸ்த்ரயுக்ம ச்ரமவிமலமநா ம்ருக்யதாம் மாத்ருசோந்யஃ" என்று எங்ஙனே சொல்லிக்கொண்டார்? பூர்வமீமாம்ஸையையும் சாரீரகமீமாம்ஸையையும் சேர்த்துத்தானே மீமாம்ஸா சாஸ்த்ரயுக்மமென்றார். சாரீரகமீமாம்ஸையில் ஆளவந்தார் எப்படி சிரமம் செய்தார்? சங்கரபாஷ்யத்தை வாசித்தாரென்கிறீரா? மற்றுங் கேட்கிறேன். திருக்குருகைப்பிரான் பிள்ளான் ஸ்ரீ பாஷ்ய பரிசயம் பெற்றிருந்தாரா? அவருடைய யோக்யதை எவ்வளவென்று நீர் தெரிந்து கொண்டிருக்கிறீர்? சொல்லும், பார்ப்போம். திசைதொறும் விழித்து நிற்பீரத்தனை.

572. உமக்குப் பல வித்வான்களோடு பரிசயமிருக்குமே. அவர்களை நீர் கேட்கவேண்டியதாவது — ஒரு விஷயத்தை யெடுத்து 'இது அஸ்வரஸம்' என்று எழுதினால் அதற்கு என்ன அர்த்தம்? என்று (கேளும்); அஸ்வரஸம் என்பதும் அஸாது என்பதும் பர்யாயம் என்று உள்ளபடியுரைப்பர்கள். அதற்குமேல் ஸ்வாமி நியாயஸித்தாஞ்ஜனத்தில் ஸ்ரீ பாஷ்யகாரருடைய ஸூக்தியொன்றை யெடுத்து

"ஏக க்ரத்த சகலாஸ்வாரஸ்யம் க்ராஹ்யம்" என்கிறீரே, அதற்கு என்ன அர்த்தம்? என்று கேளும். அர்த்தமென்ன? அனர்த்தந்தான் என்பர்கள். * யதிப்ரவரபாரதீ ரஸபரேண நீதம் வய:* *ஏரணிகீர்த்தியிராமானுசமுனியின்னுரைசேர், சீரணி சிந்தையினோம் சிந்தியோமினித் தீவினையே* என்ற அழகு இதுதானோ? என்று கேளும். இதுதான் என்பர்கள். அதைவாங்கி முள்தானையிலே முடிந்துகொள்ளும். உங்கள் வித்வான்களைக் கேட்கவேண்டிய விஷயங்கள் இப்படி இன்னும் அனேகமிருந்தாலும் இவ்வளவு போதுமிப்போது.


573. ஒருமருமம் தெரிவிக்கிறேன், உணர்ந்து கொள்ளும். ஸ்வாமி ஹயக்ரீவோபாஸனை பண்ணினபோது *ஸ்வாமிந் ஸமாஜேஷு ஸமேதிஷீய ஸ்வச்சந்த வாதாஹவபத்தசூர:* என்றும், "ஜிகீஷதோ மே கவிதார்க்கி கேந்த்ராந் ஜிஹ்வாக்ரஸிம்ஹாஸநம் அப்யுபேயா:" என்றும் கவிகளையும் தார்க்கிகர்களையும் வெல்ல வேணுமென்று ஆசை கொண்டிருந்தார். புதுக்கோட்டை, வனபர்த்தி, கத்வால், மைஸூர் முதலான விடங்களுக்குச் சென்று கவிகளையும் தார்க்கிகர்களையும் வென்று ஒருவாறு அவ்வாசையைத் தீர்த்துக்கொண்டிருப்பர். இதெல்லாம் ஸ்வாமி ஆசார்ய பீடத்தை அலங்கரித்தருள்வதற்கு முன்பு. அதாவது 18, 20 பிராயத்திற்குள்ளே. இருபத்தோராவது பிராயத்திலே "ச்ராவிதசாரீரக பாஷ்ய;" என்னும்படி ஆசார்ய பீடாரோஹணம் செய்த பின்பு "ஸம்பாவநா பஸ்ய ஹி காலகூட: ஸபா புஜங்கீ குணபம் தருண்ய:" என்று தேசிகதிநசர்யையில் சொல்லுகிறபடி எந்த ஸபையிலும் தலைகாட்டா திருந்தார். இதைப்பற்றி நாம் ஸபா புஜங்கீஸர்வஸ்வமென்று 105 சுலோகங்கள் கொண்ட இரண்டு ஸர்க்க முள்ள காவியத்தை உரையோடுங்கூட தேவநாகரியிலும் தெலுங்கிலும் வெளியிட்டிருக்கிறோம்.


574. ஸங்கல்பஸூர்யோதயத்தில் ஆசார்ய சிஷ்யஸம்வாத கட்டமொன்று அமைத்து, ஆசார்யன் 'நான் வாதத்திற்குவருவது தகாது, சிஷ்யா! நீ சென்று வென்றுவா' என்று ஆசீர்வதித்து அனுப்புகிறார்; விச்வாமித்ர முனிவர் தாம் பொருவதை விட்டுத் தாசரதிகளை இடையிட்டதையும் உதாஹரிக்கிறார் ஆசாரியர். D. R. ஸ்வாமிந்! !என்னுடைய நூல்களில் இல்லாத விவரணம் எதுவுமே கிடையாதென்பது உமக்குத்தெரியுமே. தேசிகனுக்குப் பெருமை கூறுவதென்னும் வியாஜத்தினால் அவர்க்கு லாகவமேயன்றோ நீர் ஸ்தாபித்து வைப்பது.

575. தனியன்கள் என்று மகுடமிட்டு "ராமாநுஜாபாத்ரத்தின் அவதாரத்திற்குக் காரணம் குருபரம்பரைகளில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது" என்றெழுதி என்றைக்கோ மாண்டொழிந்த விஷயங்களுக்கு இன்னமும் உயிரிருப்பதாக என்பிக்கப் பாடுபடுகிறீர். அடிக்கடி நீர் உதாஹரிக்கிற குருப்ரம்பரைகளை இந்த எழுநூறுண்டு மெமோரியலாக் அச்சிட்டு வெளியிட்டு என்னிடம் செக்கு பெறுவீராக. இது ஏற்கெனவே எழுதியானாலும், இது முக்கியம் மிக முக்கியம் என்பதற்காகவே பிஷ்டபேஷணம்.

576. 'ஸ்ரீதேசிகனருளிய திவ்யஸூக்திகள்' என்று மகுடமிட்டு நிகமபரிமலம் என்றெழுதி அது லுப்தமென்றும், பக்கத்திலேயே யெழுதி முடித்திட்டீர். சில கர்ப்பங்கள் நாலாறுமாதத்தில் அபார்ஷனாவதுண்டே, அப்படியாய் விட்டதாக

ஹிஸ்டரி முடித்து விட்டீர். (உமது வைபவம்—பக்கம் 13ல்) அந்த நிகமலம் 74000 கிரந்தங்கள் கொண்டதென்றும் அழகியதென்றும், திருவாறுயிரப்படிக்குப் பின் தோன்றிய பல வியாக்கியானங்களிலுள்ள தோஷங்களையெல்லாம் களைந் தொழித்ததென்றும் எழுதுகிறீர். தேசிகன் திருவாக்கில் ஆறுயிரப்படியென்றோ திருவாறுயிரப்படியென்றோ திருக்குருகைப்பிரான் பிள்ளானென்றோ பிள்ளா னென்றோ ஒரு மூலையிலும் ஒரு துணுக்கையும் வெளிவந்ததாகக் காணுமையாலே அந்தத் திருவாறுயிரப்படிக்கே கண்டனமாகத்தான் நிகமலம் தோன்றிய தென்று உண்மையை யெழுதிவைப்பது நன்று.

577. தேசிகன் தம்முடைய பகவத்விஷய காலக்ஷேபத்திற்கு நிதியாகக் கொண்ட பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தையும், பிரதிபதார்த்தம் தெரிந்து கொள்வதற்காக ஏகாந்தமாயுபஜீவித்த வாதிகேஸரிபன்னீராயிரத்தையும் சிரமேற்கொண்டிருந்தாரென்பதை நான் எத்தனை நூல்களில் விரிவுக்கு அஞ் சாமல் புநருக்திக்கும் கூசாமல் விவரித்துள்ளேனென்பது தெரியுமே உமக்கு. தேசிக திவ்யஸூக்திகளில் ஏதேனும் சுவைகண்டால் அதற்கு ஆகரம் பெரியவாச் சான்பிள்ளை வியாக்கியானங்களேயென்பதில் ஸந்தேஹமுடையார் ஆருமில்லையே அங்ஙனே தேசிகனுக்குக் கண்கொடுத்த ஆசார்யஸார்வபௌமரிடத்திலா அப சரிப்பது?

578. D. R ஸ்வாமிந்! இப்படியெல்லாம்நீர் அஸதஸ்யமாக எழுதினது ஆச் சரியமன்று; விவேகியென்று பேர்பெற்ற நமது நண்பர் ஒப்பிலியப்பர் இதை வாங்கி அச்சிடுவித்தாரே, அதுதான் ஆச்சரியம். ஆனல் பிறகு நான் அநுதாபம் காட்டி விட்டேனேயென்பர். ''ப்ரக்ஷாலநாத் ஹி பங்கஸ்ய தூராத் அஸ்பர்சனம் வரம்'' என்பது அவர்க்குத் தெரியாததன்று. * அஸம்பவம் ஹேமம்ருகஸ்ய ஜந்ம ததாபி ராமோ லுலுபே ம்ருகாய * என்றுகொண்டு ஸமாதானமடைவோம். இளமை தொடங்கி இன்றளவும் என்னிடத்தில் அவர்க்கும், அவரிடத்தில் எனக்கும் உள்ள ப்ரீதி விச்வாஸங்கள் அப்ரகம்ப்யமானவை. *என்னை நெகிழ்க்கிலும் என்னுடை நன்னெஞ்சந்தன்னையகல்விக்கத் தானுங்கில்லானினி* என்கிற ஆழ்வார்பாசுரத்தை இருவோமும் அநுஸந்திக்கப் பாங்குண்டு. அவரும் ஸங்கேத பந்தவிஸர்ஜன பீதியை எளிதில்விடமுடியாமல் தவிக்கிறுர் பாவம்!

579. அந்நாள் தொடங்கி இடைவீடின்றி அவதரித்து வந்த என்னுடைய ஆராய்ச்சி நூல்களை அவர் தாம் ஆர அமர ஆராய்ந்தது பழுதுபடாமல் ஸபலமாம் படி அவர் ரஹஸ்யப்பதிப்பில் ஸதஸ்யமாக எழுதி முகப்பிலேயே வெளியிட்டிருக் கிற பங்க்திகள்—''ஸ்ரீ தேசிகசரித்ரம் பல்வேறு பதிப்புக்களில் வெளிவந்துள்ளது; அவற்றில் நிகழ்ச்சிமுறை, நடந்த இடம், காலம் முதலியவற்றில் சிறிது வேறுபாடு காணப்படுவது உண்மையே'' என்பனவாம். இவை உமக்கு உகப்புக்கு இடமா யினவோ? வெறுப்புக்கிடமாயினவோ அறியேன். நீரும் ''ஸ்வாமி தேசிகனுடைய வாழ்க்கையின் நிகழ்ச்சிகள் சரித்திர ஆராய்ச்சிமுறைமையில் தக்க ஆதாரங்களுடன் நமக்குக் கிடைக்கவில்லை'' என்றெழுதியிருக்கிறீர். இதை முன்னமே யெடுத்துக் காட்டியிருக்கிறேனே. இது உண்மையானாலும் இதை நீர் எழுதியிருக்கவே கூடாது.

நீரும் உம்மைச்சேர்ந்தவர்களும் எழுதும் தேசிக சரித்திரங்களில் எந்தெந்த விஷயங்களுக்கு ஆதாரம் கிடைத்திருக்கிறதென்று கேட்டால் "ஸ்ரீரங்கத்தில் ஆசார்ய பதவியை அலங்கரித்திருந்த பெரியார்களெல்லாரும் தேசிகனிடத்தில் அசூயை கொண்டு கிருஹத்வாரத்தில் பாதரக்ஷைகளைக் கட்டிவைத்தும் காலைவாரியிழுத்துவிட்டும் ச்ராத்தத்தைக் கெடுத்தும் மற்றும் பலபல செய்தும் தேசிகனைப் பரிபவப்படுத்தினார்கள்" என்னுமிவ்விஷயங்களுக்கே பிரபலமான ஆதாரங்கள் கிடைத்திருக்கின்றன வென்பீர்போலும்.

**580.** முக்கியமாக ஒன்றே ஸாரமாகத் தெரிவிக்கிறேன். நீரெழுதிய தேசிக வைபவத்தில் ஸ்வாமியின் அவதார ஸமாபனத்தை யெழுதுகையில் ஸ்வாமி பரமபதித்தது ஸ்ரீ ரங்கத்தி லென்று சிலர் கூறுவதாகவும், திருவயிந் திரபுரத்தி லென்று சிலர் கூறுவதாகவும் எழுதி முடித் திருக்கிறீர். இப்படி கூட எழுதலாமா? அவதார வருஷத்தில் ஸந்தேஹம்; பரமபத ஸ்தலத்தில் ஸந்தேஹம். மற்றவை கிடக்கட்டும் வருஷம் விபவமா சுக்லமா? என்கிற போராட்டம் இன்னும் தீரவில்லை; இல்லையில்லை. அதை ஒருவாறு தீர்த்துக் கொண்டோ மென்கிறீரா? அது தீருகிற விவாதமாக இல்லையே; அதைச் சிறிது விவரிக்கிறேன் கேளும்.

**581.** "ஸ்ரீ வைஷ்ணவஸித்தாந்த ப்ரசார ஸபாத்யக்ஷை: ப்ரகாசிதா" என்று 1938ல் வெளியிடப்பட்ட தத்வடீகைக்கு ஸ்ரீ மத் பரமஹம்ஸ. இஞ்சி மேட்டழகிய சிங்கர் அருளிய பூமிகையில் "அவதாரகால:" என்று மகுடமிட்டு எழுதுகையில் (வடமொழியில்) 'ஸ்வாமியவதாரம் விபவ வருஷத்திலென்று பல பெரியார்களிடம் கேட்டிருக்கிறோம்' என்றெழுதிவிட்டு, சுக்ல வருஷத்தில் அவதார மென்கிற பக்ஷத்தைக் காட்டி அதற்கே ப்ரமாணம் காட்டுகிறார் "ஸ்ரீ தீயோக்யே சகே சுக்லே ஸம்பூத்வேங்கடேச்வர:" என்று. "சுக்லே என்பதற்கு சுக்ல வருஷத்திற்கு முந்தின வருஷத்தில்' என்று லக்ஷணையால் பொருள் கொள்ளலா மென்கிறார்கள்" என்றுமெழுதுகிறார். விபவ வருடமென்பதற்கு ஒரு ப்ரமாணமும் காட்டிற்றிலர். தமக்குக் கேள்வி யென்றுரைத்ததனை. முடிவில் ஒரு நிர்ணயமுமில்லை. நிர்ணயமிருக்கட்டும். அவதாரவருஷத்தில் இப்படி மதபேதம் ஏன் உண்டாகவேணும்? வேறுஎந்த ஆசார்யருக்காவது இங்ஙனே விவாதமுண்டாகியிருக்கிறதோ?

**582.** அவதாரவருஷத்தில்தான் விவாதமென்றால் பரமபதித்த ஸ்தலத்திலுமா விவாதம் விளையவேணும்? தேசிகன்விஷயத்தில் நிர்விவாதமானது ஒன்றுமேகிடையாதா? எதை யெடுத்தாலும் விவாதந்தானா? "தேவப்பெருமாளுடைய அவதார காலத்திலேயே தேவாஸுரயுத்தம் தொடக்கமாயிற்று, அது இற்றைக்கும் அநுவர்த்திக்கிறது" என்று சில ரஸிகர்கள் சொல்லுமாபோலே, தேசிகனுடைய கர்ப்பவாஸமே தொடங்கி விவாதந்தான் என்ன வேண்டியதாயிற்றே. நீர்எழுதியிருக்கிறபடி பரம பதஸ்தலவிவாதம் இப்பிறப்பில் இந்தயுகத்தில் தீருவதாக இல்லையே! பெரியார்கள்அவதரித்த ஸ்தலத்தையும் திருநாடலங்கரித்த ஸ்தலத்தையும் உலகில் அவரவர்கள் எப்படிகாத்து வருகிறார்களென்பது உமக்குத்தெரியாதா? இது விவாதத்திலிருக்கிறதென்று எழுதிவைப்பது! தேசிகனோடு இடையறுத தொடர்பு இருந்தால் இப்படியெழுதி வைக்க ப்ரஸக்தியிருக்குமா? தங்களுடைய நவீநத்வத்தைத் தாங்களேயா கல்வெட்டாக்குவது?

583 நையாயிகர்கள் "க்ல்ப்தயோர் விநிகமநாவிரஹே அக்ல்ப்தமந்யத் ஸித்த்யதி" என்றொரு நியாயம் கூறுவர்கள். இந்தரீதியில் ஸ்வாமிபரமபதித்தது ஸ்ரீரங்கத்திலா? திருவயிந்தையிலா? என்பது விவாத க்ரஸ்தமாயிருப்பதால் காஞ்சீபுரத்திலென்று நான் நிஷ்கர்ஷிக்கிறேன்" என்று துணிந்து எழுதிவிடலாமே. அடிக்கடி குருபரம்பரை குருபரம்பரை யென்கிறீரே; அதில் இதைப்பற்றி ஒன்றுமில்லையா ஸ்வாமிந்! இதற்கு அடுத்தபடியாக "ஒரு சிற்பி ஸ்வாமியுடன் வாதத்திற்கு வந்தபோது" என்றெழுதத் தொடங்கிவிட்டீர்; ஆதியோடந்தமாக வாத விவாதம் தவிர வேறில்லையே. வழிப்போக்கனெல்லாம் ஸ்வாமியோடு வாதத்திற்கு வந்தானென்பதும், அந்த அஸம்பாஷ்யர்களோடுங்கூட எதிர்வாதம் பண்ணி வெற்றி பெற்றாரென்பதும்........ அந்தோ! இதுவா தேசிகவைபவம்! தேவலோகப்ருஹஸ்பதியே நேரில் வந்து (தேசிகனிடத்தில்) "உமக்கு அது தெரியாது, இதுதெரியாது என்றால், ஸாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி "எனக்கு ஒன்றும் தெரியாதப்பா' என்று ஸாதிப்பவரான ஸத்வநிதிஸ்வாமியை வலுச்சண்டைகளில் மாட்டவைத்து வைபவமென்று எழுதுவதா பக்தியின்பணி? க்ரிமிகீடப்ராயங்களான ஜந்துக்கள் ஸ்வாமியை அணுக முடியுமா? நெடுந்தூரத்திலேயே நீறுகியொழியுமே.

584 ஸ்வாமி ஒரு நாள் வபனம் செய்வித்துக் கொள்ளவேண்டி நாபிதனையழைக்க 'ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரரான உங்களுக்கு இது தெரியாது போலும், என்று அவன் ஏசின வளவிலே, "அப்படியாஸமாசாரம் ? எனக்குத் தெரியாதது முண்டோ? இதோ பார் என்று ஸாதித்து ........(மேலேயெழுதக் கை நடுங்குகிறது;)....இப்படி சில மூர்க்கர்கள் கதையெழுதி வைத்தால் அதையும் வைபவ நூலிலே புகுத்திவிடுவீர்கள் போலும். யாதவாப்யுதய ப்ரதமஸர்க்காவஸானத்தில் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ர பதத்திற்கு தீக்ஷிதர் அர்த்தவிவரணம் செய்கிறவர்; சாஸ்த்ரார்த்தங்களை ஸ்வேச்சையாக மாற்றவல்லவர் என்றெழுதினாரேயொழிய, கிணறு கட்டுகிறவர், பாம்பாட்டுகிறவர், சிற்பியோடு போராடுபவர் என்றெல்லாம் எழுதியிருக்கவில்லையே. ஸ்வாமிக்கு இன்னது கௌரவாவஹம் இன்னது லாகவாவஹம் என்று கூடவா தெரிந்துகொள்ள முடியவில்லை.

585 ஸ்வாமிதேசிகன் தமிழிலும் வடமொழியிலும் மணிப்ரவாளத்திலும் நூல்களியற்றினர் என்றெழுதினீரேயொழிய ப்ராக்ருதத்திலும் புலியானவர் என்றெழுத மறந்தீரே. ஸ்ரீவைஷ்ணவாசார்யர்களில் வடமொழி தென்மொழி மணிப்ரவாளங்களில் நூல்களெழுதினவர்கள் இருந்தாலும் ப்ராக்ருதத்திலெழுதினவர்கள் கிடையாது'. என்று ஜயபேரியடித்து இதையும் எழுதியிருக்கவேண்டாவா? முக்கியமான பெருமைகளை விட்டுவிடுகிறீர். வீண்வம்பு தும்புகளை வளர்த்துகிறீர்.

586. பஹுதான்ய ஸூ ஆவணி மீ சுக்லத்விதீயை ஹஸ்தநக்ஷத்ரங் கூடிய செவ்வாய்க்கிழமையன்று 18- 8- 1338ல் உலகமங்களத்திற்குக் காரணமான ராமாநுஜாபாத்ரபத்யம் தோன்றியதாக எழுதுகிறீர். இந்த பத்யத்தினால் விளைந்த உலகமங்களம் நாடறிய நகரமறிய ஊரறிய உலகமறிய கோர்ட்டறிய கொத்தளமறியப் பரவியிருப்பதால் இதில் யாருக்கும் ஸம்சயம் வர்த்தியாது. ஆங்கிலத்தேதி தெரியவந்ததேயொழிய தமிழ்த்தேதி தெரியவில்லையே பாவம்! ஏபாவம்! கி. பி.

1329 ல் ஸ்ரீமான் வேங்கடதனியனவதாரம் என்கிறீர். ஒன்று கேட்கிறேன் சொல்லுவீரா? ஸ்வாமியின் திருவாக்கில் அத்புதமும் அத்யத்புதமுமான நூல்கள் அவதரித்தன; அவற்றுள் சததூஷணி முக்கியமா' அதிகரணஸாராவளி முக்கியமா, தத்வமுக்தாகலாபம் முக்கியமா? என்று கேட்டால் ஒவ்வொன்றும் முக்கியமேயென்றுதான் விடையிறுப்பர் விவேகிகள். இவை தோன்றியது எந்தவருடம்? எந்தமாதம் எந்த நக்ஷத்ரம்? எந்ததிதி? என்று கேட்டால் வாய்திறப்பாரில்லை. ஏனில்லை? வேணபேர் இருக்கிறார்கள் என்கிறீரா?

587. ஓரிரவில் ஒருயாமத்தில் ஒருவிநாடியில் அவதரித்ததாகச் சொல்லப்படுகிற பாதுகாஸஹஸ்ரம் தோன்றியது இன்னநாளிலென்பது யார்க்கேனும் தெரியுமோ? பிறந்தநாள் தொடங்கிப் பாதுகாஸஹஸ்ர பஹுமானம் பெற்றுவருகிறவொரு பத்யத்திற்கு திதி வார நக்ஷத்ர லக்ன ஹோரைகளுட்பட ச்லோகபூர்வகமாகவும் தெரிவிக்கப்படுகிறதென்றால் இதை ஆச்சரியமென்பதா? அற்புதமென்பதா? விசித்திரமென்பதா? விடமமென்பதா? மாயமென்பதா? ஆழ்வார் *மருள் தானீதோ மாயமயக்கு மயக்கே* என்கிறாரே, அது வென்பதா? 'அதுவிதுவுது வென்னலாவனவல்ல' என்றுதான் சொல்லவேண்டும்—என்று 3-10-14ல் ஞானப்பிரானெழுதியிருப்பதே நினைவுக்கு வருகின்றது.

588. இதை நன்கு நெஞ்சிற்கொண்டு விடையிறுக்கவேண்டுகிறேன். தேவரீர் எழுதியிருக்கிறபடி. தேசிகனவதாரம் கி. பி. 1268. ஸ்ரீமான்வேங்கடதனியனவதாரம் 1329. மற்றது கிடக்கட்டும். தேசிகனுக்கு ஷஷ்ட்யப்த பூர்த்தியான பிறகு மேலே ஒருவருடமும் கழித்து ஸ்ரீமாந் வேங்கடதனியனவதரித்ததாகக் காட்டிவிட்டீர். ஸ்வாமிதாமே ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் "விம்சத்யப்தே விச்ருத நாநாவிதவித்ய:" என்று ஸாதித்தபடி இருபதுபிராயத்திற்குள் தம்முடைய கல்விப் பயிற்சிகளை முடித்துக் கொண்டவர் உடனே ப்ரவசன ப்ராரம்பம் செய்திருக்கவேண்டியவர். அதையும் அவ்விடத்திலேயே தாமே ஸாதிக்கிறார் *த்ரிம்சத் வாரம் ச்ராவித சாரீரகபாஷ்ய: * என்று; முப்பதுதடவை ஸ்ரீபாஷ்யப்ரவசனம் செய்தருளினதாக ஸாதித்தபடி. தத்வடீகையில் "...ப்ரவசந விதாவஷ்டாவிம்சே ஜயத்வஜபட்டிகா" என்று இருபத்தெட்டாவதான ப்ரவசனபர்யாயத்தில் அந்த (தத்வடீகா) க்ரந்தம் ஸாதிக்கப்பட்டதாகவுள்ளது.

589. ஸ்ரீமத் இஞ்சி மேட்டழகிய சிங்கர் அருளியதாக மேலே ப்ரஸ்தாவித்த தத்வடீகா பூமிகையில் 'அஷ்டாவிம்சே ப்ரவசனவிதௌ' என்றதைக் கொண்டு ஸங்கல்பஸூர்யோதயத்திற்கு முன்னமே தத்வடீகை அவதரித்ததாகத் தெரிவிக்கப்படுகிறது. இந்த ப்ரவசனங்களெல்லாம் இருபது திருநக்ஷத்ரத்திலிருந்தே நிகழ்ந்துவந்தனவென்று கொள்ளாமல் ஷஷ்டியப்த பூர்த்திக்குப் பிறகுதான் ஸ்வாமி ப்ரவசனமாரம்பித்தாரென்று சொல்லிவருகிறீர்கள். ஹா, எங்கே சொன்னோமென்பீர்; ஸ்ரீமாந் வேங்கடதனியன் அவதரித்த காலத்தைச் சொன்னபோதே இது சொல்லப்பட்டதாகவில்லையா? தனியன் ஸேவிக்கும்படியான ப்ரஸக்தியில்லாமல் உபந்யாஸரூபமாக ஸாதித்துவந்தாரென்பீர். வேறுகதியேது?

590. அலங்கார சாஸ்த்ரத்தில்* மித்யாத்யவஸிதி யென்று ஓர் அலங்காரம்

அதற்கு லக்ஷணம் "கிஞ்சிந்மித்யாத்வ ஸித்த்யர்த்தம் மித்யார்த்தாந்தர கல்பனம்" என்று சந்த்ராலோகத்தில் காண்கிறது. 'ஒரு புளுகை ஸ்தாபிக்க மற்றொரு புளுகு' என்று இவ்வளவே சொன்னாரவர். "ஒரு புளுகை ஸ்தாபிக்க ஒன்பது புளுகு; கடைசியில் எல்லாம் புளுகென்று முடிந்திடும்" என்ற வகையிலுள்ளது உங்கள் வாசகமாலே. ஸ்ரீமாந் வேங்கடதனியன் அவதரித்த பிறகு ஒன்பது வருடங்கழித்து ராமாநுஜா பாத்ரபந்ய ப்ராதுர்ப் பாவம் என்றெழுதி அதை பகவத்விஷயத்தனியனாக வைத்துக் கொள்ளும்படி தேசிக திவ்யாஜ்ஞை என்கிறீர்கள். ஆக தேசிகனுடைய எழுபது திருநக்ஷத்ரத்துக்கு மேல் ராமாநுஜா பாத்ரபத்யோதய மென்றீரானீர். அத்தனை நாள் வரையில் பகவத் விஷய ப்ரவசனம் எந்தத்தனியனைக் கொண்டு நடந்ததென்று கேட்டால், திசை முகனாகிறீர். 'ஸ்ரீமான் வேங்கடதனியனைக் கொண்டுதான் நடந்தது; பரமஸாத்விகமான பகவத்விஷய காலக்ஷேபத்தில் கவிதார்க்கிக கேஸரீ என்கிற விசேஷண மிருக்கக் கூடாதென்று ஒருநாள் தோன்றிற்று' என்று தலைகாலில்லாமல் சொல்லுகிறீர்கள். இந்த சர்வித சர்வண பிஷ்டபேஷணங்கள் எந்தனைகாலம் தொடருமோ தெரியவில்லை. ஏபாவம்பரமே! என்று ஆழ்வார்முடிமேல்மோதிக்கொண்டார்.

591. ஸ்வாமிந்! தேசிக வைபவத்தில் நீர் எழுதியிருப்பதும் தவிர உமது வகுப்பைச் சேர்ந்தவர்கள் பெரும்பாலும் அந்தபரம்பரையாய்ச் சொல்லி வருவது "தென்கலையாசாரியர்கள் பிராட்டியின் வைபவத்தை மிகவும் குறைத்து விட்டார்கள்; நம் தேசிகனே அதை ஆணியடித்தாற்போல் நன்றாக ஸ்தாபித்தவர்" என்பதாக. இது ஒன்றையும் பாராமல் கண்மூடித்தனமாகச் சொல்லி வருவதேயொழிய இதில் ஈஷத்தும் உண்மையில்லை யென்பதைப் பலகால் பலநூல்களினால் ஏழேழ்பிறவிக்கும் வாய்திறக்க முடியாதபடி நிரூபித்திருக்கிறேன் ஸதாசார்ய ஸம்க்திரக்ஷா முதலான எனது நூல்களைப் பாராத வித்வான்களுமில்லை மறுப்பெழுதுவதாகத் தொடங்கி மருமமறிந்து ஓய்ந்து நில்லாதவர்களுமில்லை அவற்றையெல்லாம் தேவரீர் பார்த்திருந்தாலும் விஷயம் மறந்திருக்கும். இதன் கீழே அவற்றின் ஸாரம் காண்க; இனிஒருநாளும்மறவீர்.

592. ஆளவந்தார் அருளிச்செய்த சதுச்ச்லோகியில் மூன்றுவது சுலோகத்தில் *ச்ரேயோ ந ஹ்யரவிந்தலோசநமந:காந்தாப்ரஸாதாத் ருதே ஸம்ஸ்ருத்யக்ஷர வைஷ்ணவாத்வஸு ந்ருணாம் ஸம்பாவ்யதே கர்ஹிசித்* என்பது உத்தரார்த்தம்; மோக்ஷபர்யந்தமான எல்லாப் பேறுகளும் பிராட்டியின் அநுக்ரஹத்தாலல்லது ஸம்பவிக்கமாட்டாதென்பது இதன்பொருள். இவ்விடத்தில் ஒரு சங்கை யுண்டாகும். (அதாவது) அபார காருண்ய வாத்ஸல்யாதி ஸகல ஸத்குண நிதியான எம்பெருமான் இடர்களைக் களைந்து இன்பங்களை யளிக்கவல்லவனா யிருக்க அவனுடைய அநுக்ரஹத்தினாலாகாதது ஒன்றுண்டோ? பிராட்டியின் அநுக்ரஹம் எதற்காக? என்று; இங்கு இந்த சங்கையைத் தோன்றுவித்த தேசிகன் அந்த ச்லோகத்தின் பாஷ்யத்திலும் வேறிடங்களிலும் பரிஹார முணர்த்தியுள்ளார். "நநு மோக்ஷப்ரதத்வம் பகவத ஏவேதி ஸர்வத்ர ஸ்தாபிதம்" என்று தொடங்கி சங்கையை உத்க்ஷேபித்து 'மைவம்' என்று தொடங்கி தத்பரிஹாரம் பண்ணி

யுள்ளார். ப்ரக்ருத ச்லோகபாஷ்யத்தின் முடிவில் நிஷ்கர்ஷம் செய்தருளின ஸ்ரீ ஸூக்தி கேண்மின். "மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷுணும் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்" என்பது முதல்வாக்கியம். இதன் பொருளாவது, மோக்ஷமளிப்பவன் எம்பெருமானே; பிராட்டியோவென்னில், புருஷகாரபூதையா யிருக்கிருளென்பது யாவருமிசைந்தது—என்பதாம்.

593. (அந்த சதுச்ச்லோகியில்தானே) இரண்டாவது சுலோகத்தில் மோக்ஷ ப்ரதாநப்ரஸ்தாவமே யில்லாதிருக்கவும் ப்ராஸங்கிகமாகக் கொண்ட விசாரத்தில் ஸ்வாமிதாமே காரிகையொன்று இட்டருளினர்; (அதாவது) * அஸ்தி கர்மார் ஹ பலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:. நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்து க்ஷணமநுக்ரஹே. * என்பதாம். இதன்பொருளாவது, கர்மாநுரூபமாகப் பேறு பெறுவிக்குமவன் எம்பெருமானே; பிராட்டி தான் இரண்டு க்ருத்யங்களை வைத்துக்கொள்ளுகிருள்; அவன் நிக்ரஹிக்கும்போது அதைத் தடுப்பதும், அநுக்ரஹிக்கும்போது அதை மேன்மேலும் வளரச்செய்வது மென்கை. அதற்குமேல் "அத்ர வரத குருபதேசஅநுஸாரிபி: வ்யாஸார்யைச் ச உக்தம்—"ப்ரதாபோஷ்மல பித்ருத்வ துராஸத பகவத் ஸமாச்ரயண ஸித்தயே புருஷகாரா நுப்ரவிஷ்ட வாத்ஸல்ய நிர்ப்பரலக்ஷ்மீஸமாச்ரயணம் ஸ்ரீமச்சப்தவிவரணமுகேந அபிதீயதே இதி" என்றருளினர் நிகமாந்த குருவரர்தாமே. மேலெடுத்தவாக்யத்தில் வ்யாஸார்யரென்னப்பட்டவர் ச்ருதப்ரகாசிகாபட்டர்; அவர்க்கு வரதகுருபதேசாநுஸாரித்வ விசேஷணமிட்டதனுல் ஸத்ஸம்ப்ரதாயசுத்தி காட்டப்பட்டதாயிற்று. தேசிகன் தமக்கு ப்ராசார்யரான நடாதூரம்மாள் உபதேசித்த யதார்த்தமான அர்த்தத்தையே அவருடைய திருவடியான ச்ருதப்காசிகாபட்டர் பொறித்துவைத்தாரென்று தெரிவித்தபடி. ச்ருதப்ரகாசிகாபட்டர் பொறித்துவைத்ததென்னவென்றுல்; எம்பெருமான் வாத்ஸல்யாதி குணநிதியாயிருக்கச் செய்தேயும் சீற்றங்கொள்ளும்படியான பிதாவாயுமிருக்கையாலே அணுகவொண்ணுதபடியாகவுயிருக்க நேருமாகையாலே அணுகுவிப்பதற்குப் பாங்கான தண்ணளிவாய்ந்த பிராட்டியைப் புருஷகாரமாகவரிப்பது ஸ்ரீமச்சப்தவிவரணமுகத்தாலே சொல்லப்படுகிறது என்பதாம். * லக்ஷ்மீ: புருஷ காரத்வே நிர்திஷ்டா பரமர்ஷிபி:, மமாபி ச மதம் ஹ்யேதத் நாந்யதாலக்ஷணம் பவேத்* என்கிற பிரமாணத்தை மீறி ஒரு ஆசார்யரும் அருளிச் செய்யாரன்றோ. நீரிலே நெருப்புக் கிளருமாபோலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தாலே சீற்றம் பிறந்தேதீரும்; அப்போது நிர்ப்பயமாக அணுகுவதற்குப் பிராட்டியின் புரஸ்கரணம் இன்றியமையாதது; ஆனதுபற்றியே * ச்ரேயோ ந ஹ்யரவிந்த லோசந மந:காந்தாப்ரஸாதாத் ருதே* இத்யாதியை ஆளவந்தார் அருளிச்செய்தது பொருத்தம்-என்னுமிதுவே தேசிகருடைய நிஷ்கர்ஷம். பிராட்டி மோக்ஷமளிக்கிருளென்ருே அளிக்கவல்லவளென்ருே தேசிகர் ஒரிடத்திலும் பணித்ததில்லை.

594. மேலேகுறித்த ச்ருதப்ரகாசிகாபட்டருடைய ஸ்ரீஸூக்திக்கும் முன்னே "உக்தஞ்ச ஸ்ரீவிஷ்ணுசித்தை: கத்யவ்யாக்யாநாரம்பே; மாத்ருத்வைகரூபாம் ச்ரியம் ப்ரபத்யதே; மாதா ஹிதாதபி புத்ரஸ்ய ப்ரியமேவ பச்யதி. பிதா து உபயம் பச்யதி. அதோ தண்டதரத்வ ஹீநதைவ அவலம்பநம் அஸ்யாம் தசாயாம் ஆஸீத் இதி." என்று எங்காளாழ்வான் ஸ்ரீஸூக்தியையுமெடுத்துக்காட்டினர்

நிகமாந்தகுருவரர். வாத்ஸல்யாதிகளைப் போல தண்டதரத்வமுமுடைய எம்பெரு மானை யணுகுவதற்கு *நித்யமஜ்ஞாத நிக்ரஹையான பிராட்டியைப் புரஸ்கரிக்க வேண்டியது அவசியமாகிறது—என்பதையே ஒவ்வோராசார்யரும் அருளிச்செய்து வைத்தார்.எங்களாழ்வானுடைய ஸ்ரீஸூக்திக்குமுன்னேபட்டருடைய ஸ்ரீகுணரத்ந கோச ஸ்ரீஸூக்தியையும் உதாஹரித்தார்-"ஆஹுச்ச *பிதேவ த்வத்ப்ரேயாந் இத் யாரப்ய *மாதா ததஸி ந:* இதி." என்று. இவ்வளவோடும் ஒய்ந்திலர்; உடனே "ஏவம் அநப்யுபகமே தாம் புரஸ்க்ருத்ய பகவதபிகமநமபி தத்ரதத்ரோக்தம் துஸ் ஸ்தம் ஸ்யாத்" என்றுமருளிச்செய்தார்: இதன் பொருள் எளிதாகத் தெரியுமே; தண்டதரனை எம்பெருமானுடைய சிற்றத்தையாற்றுதற்குப்பிராட்டியைப் புருஷ காரமாகக் கொள்ளவேணுமென்று இசையாதொழியில் ஆங்காங்கு சாஸ்த்ரங்களில் பிராட்டியைப் புரஸ்கரித்து எம்பெருமானை ஆச்ரயிக்க வேணுமென்று கூறியிருப்பது பொருந்தாமற்போகும்-என்கை. இஃதொன்றுபோதும் தேசிகனுடையதிருவுள்ளத் தையுணர. இதே கெட்டத்தில்தான் (கீழே உதாஹரித்த) * அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷண மநுக் ரஹே* என்னும் ஸ்வகீய காரிகையை இட்டருளினர். இந்தகாரிகையானது ப்ரக்ருத விஷயத்தில் தோன்றும் ஸகலஸந்தேஹங்களையும் வேரறுக்கவல்லதன்றோ. பிராட்டி யின் இத்தகைய இரண்டு க்ருத்யங்களைத் திருவுள்ளம்பற்றியே ஆளவந்தார்*ச்ரே யோ நஹ்யரவிந்த லோசந.......*இத்யாதியை யருளிச் செய்தாரென்று தேசிகனு டைய பாஷ்ய நிகமனம். இதைத் திடமாகத் தெரிந்து கொள்ளும்.

595. தேசிகன் "நநு-மோக்ஷப்ரதத்வம் பகவத ஏவேதி ஸர்வத்ர ஸ்தாபிதம்' என்று தாம் உத்க்ஷேபித்த ஆசங்கையைப் பரிஹரிக்குமிடத்து "மோக்ஷப்ரதே பக வதி முமுக்ஷூணும் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்" என்றருளிச் செய்ததுண்டே' இஃதொன்றுபோதாதா தெளிவதற்கு? இதற்கு அடுத்த வாக்ய மும் கேளீர்—"பரிபூர்ணநுபவ ப்ரதாந ஸங்கல்பஸ் து பகவத: ஸ்வஸ்யைவ வா ஸபத்நீகஸ்ய வா இதி யதாப்ரமாணம் பவது" என்றார். ப்ரமாணஸாகர பாரங்கதரான தேசிகர் ப்ரமாண பரிசீலநபூர்வகமாகவும் ஆசார்யோபதேசாநு ஸாரமாகவும் ஸித்தாந்தப் பொருளைத் தாம் விவரியாதே "யதாப்ரமாணம்பவது" என்றது ஏன்? என்கிற விசாரம் நாம் செய்யத்தக்கதன்று. உள்ள வாக்யத்தை விமர்சிப்போம்; பலனளிப்பவன் பலப்ரதான ஸங்கல்பம் செய்யவேண்டியவன்; எவன் பலனளிப்பவனே அவன் ஸங்கல்பகர்த்தாவாவன். ப்ரக்ருதமான மோக்ஷப் ரதானத்தில் ஸங்கல்பகர்த்த்ருத்யாதிகாரியை விமர்சிக்கின்ற தேசிகன் "ஸங்கல்ப: பகவத: ஸ்வஸ்யைவவா? பத்ந்யா அபி வா?" என்று விகல்ப சரீரத்தை வைத் திலர் என்பது முக்கியமாகக் குறிக்கொள்ளத்தக்கது. நியாயஸித்தாஞ்ஜனத்தில் *இயம் கேவலக்ஷ்மீசோபாயத்வப்ரத்யர்த்மிகா, ஸ்வஹேதுத்வநியம ருந்தே* என்கிற ஸ்வாமியின் காரிகையானது ப்ரபத்தியின் உபாயத்வத்தைமட்டும் தவிர்ப் பதன்று; பிராட்டியின் உபாயத்வத்தைத்தான் முந்துற முன்னம் தவிர்ப்பது; பிராட்டிக்கும் உபாயத்வ முண்டென்று திருவுள்ளத்திலோடியிருந்தால் * லக்ஷ்மீததீ சோபாயத்வப்ரத்யர்த்மிகா* என்றன்றோ வசனவ்யக்தி வெளிவந்திருக்கும். இச் சிறு விஷயத்தையும் க்ரஹிக்கமாட்டிற்றிலீரா?

596 ஸம்ஸ்க்ருத நூல்களில் இங்ஙனே விமர்சித்து விலக்கியருளின தேசிகன் சில்லரை ரஹஸ்யங்களில் பணித்தவையும் பாரீர்;—ரஹஸ்ய ரத்நாவளி யென்றும் அதன் ஹ்ருதயமென்றும் இரண்டு ரஹஸ்யங்கள் ப்ரஸித்தம். முப்பது வாக்யங்கள் கொண்ட ரஹஸ்ய ரத்நாவளியில் நான்காவது வாக்யம்—"ஸர்வஸ்வாமி நியாய் :ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரியபிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க்கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிருள், இவளைப் புருஷகாரமாக்கவேண்டுகிறது ஈச்வரன் தண்டதரனுகையாலே" என்று பிள்ளை லோகாசார்யருடைய முமுக்ஷுப்படி முதலான ரஹஸ்யச்சாயையிலே பணித்துவைத்தார். இதன் விவரணமான ரஹஸ்ய ரத்நாவலீ ஹ்ருதயத்தில் விசேஷமுள்ளது; (அஃதென்ன வென்னில்) இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிருள்" என்றதற்கு-"பவேயம் சரணம் ஹி வ:*! என்றருளிச்செய்தபடியே இவர்களுக்கு ரக்ஷாஹேதுவாகிருளென்றபடி" என்று விவரணம் காட்டினுர். ரக்ஷகத்வமும் ரக்ஷாஹேதுத்வமும் பர்யாயமன்று; ஈச்வரனை ரக்ஷாஹேதுவென்று யாரும் சொல்வதில்லையே.

இனி, நீர் கொண்டாடின ரஹஸ்யத்ரயஸாரத்தின் அற்புதமான பெருமை—

597 ஆகவிப்படி பிராட்டிதிறத்தில் உபபாதனங்கள் செய்தருளின ஸ்வாமி தாமே ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸித்தோபாய சோதநாதிகாரத்தின் முடிவில்—"இப்படி மத்யஸ்த த்ருஷ்டியாலே ப்ராமாணி கார்த்தங்கள் தோற்றச் செய்தே பற்றினது விடாதொழியில் *த்ருடபூர்வச்ருதோ மூர்க்க ..........மந்தபுத்தீநாம் துராத்மநாம் குதர்க்க வ்யாலதஷ்டாநாம் விப்ராந்தேந்த்ரிய வாஜிநாம்* என்கிற தசையாம்" என்கிற பரம பாவந பரமபோக்ய -திவ்ய ஸ்ரீஸூக்திமாலிகையை இட்டருளியுள்ளார் . இந்தவாக்யராசியைப்பற்றி நாற்பது வருஷகாலமாக ப்ரபல சர்ச்சை செய்து வருகிறேம். மத்யஸ்த த்ருஷ்டியாலே ப்ராமாணிகமாகத் தோற்றினதாகத் தாம் அபிமானிக்கும் அர்த்தங்கள் எவை? *த்ருடபூர்வச்ருதோ மூர்க்க இத்யாதி ஸத்கார யோக்யர்களாகத் தாம் கொண்ட க்ருஹீதக்ராஹிகள் பெரியோர்களைப் பணிந்து கேளாமல் மூர்க்கத்தனமாகச் சொல்லிவரும் அர்த்தங்கள் எவை? என்றிவ்வளவே நமது கேள்வி. அந்த ப்ரகரணத்தில் அவர் தாம் முன்னே நிரூபித்த அர்த்தங்கள் எவை யென்று பார்த்து விடையிறுக்கவேண்டிய விஷயமிது. * த்ருடபூர்வச்ருதாதி ஸத்காரத்திற்கு முன்னேயுள்ள நிரூபணங்களிவை—" அலமேஷா பரித்ராது மென்று ஸ்ரீ வால்மீகி பகவான் சரணுகதிஸாரமான ஆதிகாவ்யத்திலே நிபந்தித்தான். * ஸம்ஸாரார்ணவ தாரிணீ மென்று ஹிரண்யகர்ப்பகாச்யபாதிகளும் சொன்னுர்கள். * வாஸ: பரம் ப்ரார்த்தயிதா ப்ரபத்யேத் நியத: ச்ரியம்* என்று ஸ்ரீ சௌநகபகவான் விதித்தான். * ஆத்மவித்யா ச தேவி த்வம் விமுக்திபலதாயிநீ* என்று .......ஸ்ரீ பராசரப்ரஹ்மர்ஷி யருளிச்செய்தான். ச்ரிய:பதிதானும் 'யாமாலம்பய ஸுகேநேமம் துஸ்தரம் ஹி குணேததிம், நிஸ்தரந்த்யசிரேணைவ வ்யக்தத்யாந ாராயணு:* என்று ஸ்ரீஸாத்வதஸம்ஹிதையிலே ஸ்ரீபதிருபத்யாநத்திலே யருளிச்செய்தான். ஆளவந்

தாரும் * ஜகத் ஸமஸ்தம் யதபாங்கஸம்ச்ரயம்* என்றும் * ச்ரேயோநஹ்ய விந்த ... ... ஸம்பாவ்யதே கர்ஹிசித்* என்று மருளிச்செய்தார். ஸ்ரீ பாஷ்யகாரரும் ஸ்ரீ வைகுண்டகத்யத்திலே *சேஷசேஷாசநாதி .......ஆஜ்ஞாபயந்த்யா* என்று பகவத் கைங்கர்யரூப பரமபுருஷார்த்தம் இவள் நியோகத்தின்படியே நடத்தவேணுமென்றருளிச்செய்தார். கூரத்தாழ்வானும் * ஸ்வஸ்தி ஸ்ரீர் திசதாத் .......* என்று ஸங்க்ரஹித்த அர்த்தத்தை * தேவி! த்வந்மஹிமாவதி....என்று தொடங்கி விஸ்தரித்தார். பட்டரும் * ஐச்வர்யமக்ஷரகதிம் பரமம் பதம்வா........என்று ச்ருதியிலு உதார சப்தத்துக்கு வியாக்கியானம் பண்ணினர். ஸ்ரீ ஸூக்தபாஷ்யத்திலே பெரியஜீயரும் அபேக்ஷிதார்த்தங்களெல்லாம் உபபாதித்தார். இப்படி ச்ருதிஸ்ம்ருதில் ஸம்ப்ரதாயம் நிற்கிற நிலைகளைக்கொண்டு ஸ்ரீமச்சப்தத்திற் சொன்ன விசேஷணத்வத்துக்கு விக்ரஹாதிகளுக்குப்போலே வஸ்த்வநுரூபமான உபயோக விசேஷங்களை ஸஹ்ருதயர் அறிந்து கொள்வது'' என்றித்தகைய வாக்யராசிகள் போகின்றன அந்தோ! இவை என்ன வாக்யார்த்தங்கள்! ஜரத்கவாதி வாக்யார்த்தமன்றோ இவை. சதுச்ச்லோகீபாஷ்யம் ரஹஸ்ய ரத்நாவளி முதலான ஸ்வகீய க்ரந்தங்களில் தாமே உபபாதித்தஅர்த்தங்களுக்கு இங்கே கண்டனமா? மண்டனமா? என்பதொன்றே கேள்வி கண்டனமேயொழிய மண்டனமன்றென்பதுகல்வெட்டு.

598. D. R. பெரியீர்! நீர் எழுதினதெல்லாம் ஸாஹஸமாயிருக்கச் செய்தேயும், வந்த்யாஸுதசசச்ருங்க ஸஹோதரமான நிகமபரிமலத்தைக் கற்பித்ததோடு நில்லாமல், தேசிகனுகந்த ஆசாரியர்களருளிச் செய்த அர்த்தங்களையெல்லம் அதில் கண்டித்துவிட்டாரென்றெழுதினதுண்டே இது அதிஸாஹஸம், அத்யந்த ஸாஹஸம், அதிதராம்ஸாஹஸம். நிகமபரிமலம்போனாலும், “ தேசிகனைப்போல் எண்ணிறந்தநூல்களையருளிச் செய்தவர்கள் இல்லை' என்று நீர் வாய்வெருவுகிற எண்ணிறந்தநூல்கள் இல்லாமற்போகவில்லையே; அவற்றில் பெரியவாச்சான் பிள்ளைபக்கல் தேசிகன் அபசாரப்பட்டதாக ஓரெழுத்து காட்டுவீரா? அரையெழுத்துகாட்டுவீரா? என்றேனுமொருநாள் என்காலமாகுமே; அதன் பிறகும் காட்டமுடியாதுகாணும். ஆறாயிரப்படியைக் கண்ணெடுத்துப் பார்த்தவரல்லர் தேசிகரென்று சபதம்பண்ணுவேன். “ இன்ன அர்த்தத்தை ஆறாயிரப்படியிலிருந்து காட்டினார் தேசிகரென்று ஒருதுணுக்கையாவது எடுத்துக் காட்டிவிடுமே, தேசிகரைச் சில சைவர்கள் “ கரிய மேனிமிசை வெளிய நீறு சிறிதேயிடும்” என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தைக் கொண்டு “ இதற்கு அர்த்தம் சொல்லுமையா” என்று மடிபிடித்துக் கொண்டார்கள். அப்போது தேசிகர் செய்ததென்ன தெரியுமோ? ஏன் தெரியாது? பலகால் எடுத்துக் காட்டியிருக்கிறேனே. பெரியவாச்சான்பிள்ளையின் இருபத்துநாலாயிரப்படியில் தாம் ஸேவித்த அர்த்தத்தையெடுத்துரைத்து “ இதி . ஆசார்யா:” என்றார். எதில்? ஸச்சரித்ரரக்ஷயில், “ இத்யாஹு.” என்றோ, “ இதி வ்யாக்யாதம்” என்றோ எழுதியிருக்கலாம். பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளை நேரில் பணிந்து பொருள்கேட்க பாகயஹீநரானாலும் அவரருளிய ஸ்ரீஸூக்திகளை ஸேவித்து ஞானம் பெற்றதற்கு க்ருதக்னராவரா? “ இதெல்லாம் எனக்கு தேசிக வைபவமெழுதுகிற காலத்தில் தெரியாமல் போயிற்று” என்பதற்கில்லையே. நாற்பது வருஷகாலமாக என்னுடைய நூல்களை இடைவிடாமல் ஸேவித்து வருகிறீரே. இன்றுதானா அபூர்வமாக எழுதுகிறேன்?

## D. R. ஸ்வாமிக்கு விண்ணப்பம்.



599. ஸ்ரீரங்கத்திலும் காஞ்சீபுரியிலும் திவ்யப்பிரபந்தம் ஸேவிக்கக் கூடா தென்று பிறரால் பிரபலமான ஆக்ஷேபம் செய்யப்பட்டதாகவும், அப்போது தேசிகரே இரண்டிடத்திலும் வாதம் செய்து கோஷ்டியை ஸ்தாபித்துவைத்ததாக வும் எழுதியுள்ளீர். இதற்கு மூவகையான ஸமாதானம் கேளும். (1) பதினெட் டாவது நூற்றுண்டு வரையில் தேசிகரை இன்னுரென்றறியாதவர்கள் நீங்கள் என்பது வர்ஷசதம் வர்ஷஸஹஸ்ரம் போராடினுலும் செப்பேடும் சிலாசாஸனமு மாக நிற்கும் விஷயம். அப்படிப்பட்ட நீங்கள் கட்டின பல கதைகளில் இதுவு மொன்று. ஸர்வாத்மநா நிராதாரமானது. (2) உண்மையில் அப்படி ஆக்ஷேபம் விளைந்திருந்தால் திவ்ய ஸூரி—திவ்ய ப்ரபந்த—திவ்யதேச வைரிகளென்று ப்ரஸித்தர்களான உங்கள் தலைவர்களே அந்த ஆக்ஷேப கர்த்தாக்காளாயிருக்க வேண்டும். இது அநுமானமாகச் சொல்லுவதன்று; ஸத்யம் சபே. சைவக் கோவில்களில் வைஷ்ணவர்கள் சென்று ஆக்ஷேபிப்பதும், வைஷ்ணவக் கோவில் களில் சைவர்கள் வந்து ஆக்ஷேபிப்பதும் இன்றளவும் கண்டுங் கேட்டுமறியாத விஷயம். திவ்யப்ரபந்த விஷயமாக நீதி மன்றங்களில் சென்ற வ்யவஹாரங் களைப் பரிஷ்கரித்தவர்கள் பெரும்பாலும் பிற மதத்தவர்களே யென்பதை அட்வொகேட்டான நீரும் அறியீரா? காஞ்சீபுரத்தில் ஆழ்வார்களை உள் ளடக்கி அவர்கள் ஸன்னிதிகளுக்கு முள்வேலி போட்டிருந்தவர்கள் உங்க ளினத்தவர்களே யென்பதை உமக்காகவே யெழுதி நான் வெளியிட்டிருக்கிற பதினறு அத்யாயங்கள் கொண்ட வரதன் ஸன்னிதி வரலாற்றில் உலகமெல்லாம் கண்டிருக்கிறதே. (3) நீர் தெரிவிக்கும் ஆக்ஷேபங்களை தேசிகன் தீர்த்துவைத்தது உண்மையென்று தேறினுல் அவர் தென்னுசாரியர்களில் தலைவர் என்பதுதான் ஊர்ஜிதமாகி நிற்கும். வேறென்றும் தேருது.



இதை மீண்டும் விவரிக்கிறேன், கேளும். முற்காலத்திலிருந்தே ஸ்மார்த்தார் களோ சைவர்களோ ஸ்ரீரங்கத்திலும் தேவப்பெருமாள் ஸன்னிதியிலும் எவ்விதமான தொடர்பு முடையவர்களாக இருந்ததில்லை. அவர்கள் திவ்யப்ரபந்த ஸேவைகளை ஆக்ஷேபிக்க அவகாசமே கிடையாது. முற்காலத்தைவிட இக் காலத்தில் அதர்க்கணச் செயல்கள் அதிகம். அப்படிப்பட்ட இக்காலத்திலேயே பிறர்கள் திவ்யப்ரபந்த கோஷ்டிகளை தூஷியாமலிருப்பதோடு ப்ரதக்ஷிண ப்ரணு மாதிகளாலே அபிநந்தித்தும் வருவதைக் காணு நின்ரேம். ஆகவே பிறர் ஓரிடத்திலும் ஒரு ஹிம்ஸையும் செய்தது கிடையாது. ஆழ்வாராசாரியர்களுக்கு உத்ஸவம் செய்யக் கூடாது, சாத்துமுறைகள் செய்யக் கூடாது; அவர்களை வெளிக் கிளப்பவே கூடாது என்று உம்முடைய இனத்தவர்கள் போராடி, ஹை கோர்ட்டு வரையிலும் இதற்காக வியாஜ்ஜியங்களை நடத்தித் தோல்வியடைந் ததும், இதற்காகவே இவர்கள் ஸர்க்காரால் விலக்கப்பட்டு ஸ்மார்த்த அதிகாரி கள் நியமிக்கப்பட்டிருப்பதும் உலகமறியும். இதைப் பற்றியும் என்னுடைய பல நூல்கள் உலகம் பரவியுள்ளன. ஆகவே தேசிகன் காலத்தில் திவ்ய ப்ரபந்த

கோஷ்டிகளைப் பற்றி ஆக்ஷேபங்கள் தோன்றியிருந்தால் அது உம்முடைய இனத்தவர்களின் செய்கையே என்பதில் ஐயுற வேண்டா.



600. உபஸம்ஹாரம் செய்கிறேனிதனை. எம்பெருமானார் தரிசனத்தைக் காப்பதற்கென்றே அவதரித்த தேசிகனுக்கு பகவத் ராமாநுஜ ஸூக்திக்கு முரணப்பேசும் பரிசு புத்திபூர்வகமாகவும் ப்ராமாதிகமாகவும் நேர்ந்துவிட்டது. இவ்விரண்டு வகுப்பிலும் பல காட்டியிருக்கிறேனாகிலும் புத்தி பூர்வகத்திற்கு ஒன்றும், ப்ராமாதிகத்திற்கு ஒன்றுமாக இரண்டே நினைவூட்டி நிகமிக்கிறேன். கைவல்ய விஷயத்தில் ஸ்ரீ பாஷ்யகாரர் ஸ்ரீ பாஷ்யத்திலும் கீதா பாஷ்யத்திலும் அவிருத்தமாக ஸாதித்திருக்கவும், என்னைப் போன்ற அல்பஜ்ஞர்களும் எளிதாக ஸமந்வயப்படுத்தியிருக்கவும் கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தியை அஸ்வரஸ மென்று தள்ளினது புத்திபூர்வகம். சமதமார்த்த நிருபணத்தில் கீதாபாஷ்ய ஸூக்தியை மறுத்துரைத்தது ப்ராமாதிகம். ஸ்வாமியே ஸாக்ஷாத்தாக எழுந்தருளினாலும் இவை அபரிஹார்யமான அவத்யங்களே. உமது கொள்கையின்படி ஸ்ரீரங்க வாஸிகள் ஸ்ரீ பாஷ்ய பரிசயம் பண்ணாதிருந்தது க்ஷேமாய. பண்ணியிருந்தால் அவர்களுக்கும் இந்த அவத்யம் நேர்ந்திருக்குமோ என்னவோ!



தேரழுந்தூராண்டவன்காலத்தில் ஒருகால் நாம் ஸ்ரீரங்கம் விடை கொண்டிருந்தபோது ஆண்டவனாச்ரமத்திலிருந்து ஏழெட்டு ஸ்வாமிகள் வந்து கொண்டிருந்தார்கள்; அவர்கள் கையிலிருந்த ஸ்ரீ கோசத்தைக் கண்டு இதென்ன ஸ்ரீ கோசம்? என்று கேட்டேன். பரமபதபங்கம் என்றார்கள். அது காலக்ஷேபமாகிறதென்றும் சொன்னார்கள். பரமதபங்கத்தை இப்படி சொல்லுகிறார்களென்று தெரிந்து கொண்ட நான் 'இதில் என்ன விஷயம்' என்று கேட்க, பரமபதமில்லையென்று அத்வைதிகள் வாதிப்பதைக் கண்டிப்பது இது என்றார்கள். இத்தகைய வித்வான்கள் இற்றைக்கும் விளங்குகின்றார்கள். அன்னவர்களால் இவற்றுக்கெல்லாம் எளிதில் ஸமாதானம் கிடைத்துவிடுமென்று நிற்கிறேன். *



டேய்க்குப்பேய் பேசினபோல் பேராமற்சொன்னதல்ல
வாய்க்கும்வாய்ப் பொருளென்பமாங்காங்களித்தனனால்
தாய்க்குந்தாய் மந்திரத்தின் சாரமென நன்குணர்ந்து
நோக்கும்நோக்குடையீராய் நுட்பமதாத்தெளிவீரே.



ஸ்ரீகாஞ்சீ அண்ணங்கராசாரியரெழுதிய
நற்பொருளெழுநூறில் ஆறுவது நூறு
முற்றுப் பெற்றது.